ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு<br>கூ | மெய்கண்டான்யாண்டு-எளஅ பங்குனித்திங்கள்<br>1931௵ மார்ச்சுமீ—ஏப்பிரல்மீ | பரல்<br>ரு |

திருச்சிற்றம்பலம்

## சுந்தர மூர்த்தி தேவாரம்.

குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைக ளிம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற வாதெழுமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி புறம்பயந்தொழப் போதுமே.

ஒருவரை=பிறர் ஒருவரை
குற்று=இடித்து
கூறைகொண்டு=(அவர் உடுத்திருந்த) சீலையைப் பிடுங்கிக்கொண்டு
சூழ்ந்த=எண்ணிச் செய்த
கொலைகள் களவெல்லாம்=கொலை களவுகளின் பயனும்
ஒருவரை=அவ்வொருவரை
செற்று=துன்புறுத்தி
செய்த தீமைகள்=செய்த பிற தீய வினைகளின் பயனும்
இம்மையே திண்ணம் வரும்=இப்பிறப்பிலேயே உறுதியாக (நிச்சயமாக) அவனை வந்து சேரும்;
மடநெஞ்சமே=பேதைமையுடைய நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி=புற்றினுள்ள பாம்பை அணிந்தவனும் எற்றினை (இடபத்தை) ஊர்தியாகக் கொண்டவனுமாகிய சிவபிரானை அல்லால்

மற்றொருவரைப் பற்றிலேன்=வேறு யாரையும் சாரமாட்டேன் (பற்று வான் அவனே என்றபடி)

மறவாதெழு=ஆதலின் அவனை மறவாது எழுந்து என்னுடன் வா

புறம்பயம் தொழப்போதுமே=அச்சிவபிரான் திருமேனி கொண்டருளிய புறம்பயம் என்னும் தலத்துக்குச் சென்று துதிப்போம்.

இந்தத் தேவாரப்பாட்டு இப்பிறப்பிலே ஒருவன் கொடுந்தீவினை செய்தால் அத்தீவினையின் பலன் இன்னொரு பிறப்பு வரையும் காத்திராமல் இப்பிறப்பிலே அவனை வந்து சேரும் என்னும் உண்மையைக் கூறுகிறது. அத்தகைய தீவினையை ஒருவன் தன் மனதில் சூழ்ந்து செய்யாதிருத்தல் வேண்டுமானால், சிவபிரானே பற்றுவான் என்று நினைந்து அவனைத் துதித்தல் வேண்டும் என்றும் கூறுகின்றது.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# கன்னிக் குமரி.

[திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். ஏ., அவர்கள்,]
(பாளையங்கோட்டை ரிஜிஸ்ட்ரார்)

“இந்நாள் எனக்குப் பயப்பட்ட திப்பிறவி”—எனப் பெரியார் கூறியவாறு ‘இசையாற் றிசைபோய’ தாய *கன்னியாகுமரி எனப்படும் கடற்கரைத் தலத்தைக் கண்டு மகிழ்ந்த ஞான்று கடற்காட்சியிற் புலப்பட்டனவாய சில உண்மைகளையும், கன்னிக்குமரியின் காட்சியின் இன்பத்தையும் காட்டுவன கீழ்க் குறித்துள்ள பாடல்கள் :

## I. கடற் காட்சி

கன்னிக் குமரித் தலக்கரையிற் கடலின் பரப்பைக் காண்டலுமே
வன்னிக் கரத்துச் சிவன் கழுத்தின் வடிவார் நீலம், திருச்செந்தூர்

---

* இத்தலம் திருநெல்வேலியிலிருந்து சேரக்கூடியது. தெற்கே 50-மைல் தூரத்திற் கடற்கரையில் உள்ளது. கீழ்க்கடலும் தெற்குக் கடலும் சந்திக்கும் முனையில் அமர்ந்துள்ளது. திருவாங்கூர் அரசைச் சேர்ந்தது. கடற்காட்சியும், கன்னிக்குமரியின் காட்சியும் மிக வனப்பு வாய்ந்தன.

மன்னிப் பொலியும் வடிவேலன் மயிலின் கழுத்தின் ஒருநீலம்
என்னத் திகழும் இக்கடலின் எழிலார் நீலம் எனத்தொழுதேன். (1)

இன்னும் ஒருசார் அக்கடலின் எழிலார் பச்சை நிறந்தோன்றக்
கன்னி குமரி நிறம்பச்சை, கந்தர் மயிலின் நிறம்பச்சை,
பொன்னி கணவன் நிறம்பச்சை, பொற்பார் குறத்தி நிறம்பச்சை,
என்ன நினைந்து சென்றேனே, இறும்பூ தெய்தி நின்றேனே. (2)

பின்னும் நோக்க அக்கடலின் பெரிய கரையிற் றிகழ்கின்ற
கன்னி கோயில் அருகிலலை கவிழ்ந்து புரளல் தாயேநின் [னென்
பொன்னி னருமைத் திருவடியிற் பொருந்தத் தொழுதேன் தொழுதே
றின்ன சொல்லி இறைஞ்சுதல்போல் இருக்குந் தன்மை யதுகண்டேன்.

பச்சைக் கடலின் நடுவணொரு பாறை யொன்று விளங்கக்கண்
டிச்சை யென்னும் ஆசையலை எல்லாப் புறமும் மோதிடினும்
பச்சைக் குறத்தி மணவாளன் பாத மலரிற் பதிந்தவுளம்
அச்சமின்றிப் பாறையைப்போல் அசைவற் றிருக்கும் எனஅறிந்தேன்.

## II. குமரிக் காட்சி

கன்னிக் குமரீ குமரீயுன் கருணை பொழியுந் திருமுகமும்
மின்னிப் பொலியுந் திருவடியில் விளங்கு நகையின் பேரொளியும்
சந்நி தானத் திருமருங்குஞ் சாரும் விளக்கின் ஒளியழகும்
என்னை அறியா ஆநந்த இன்ப நிலையிற் சேர்த்தனவே. (5)

வரைவில் லாகக் கொண்டவனை மணத்தல் வேண்டித் தவஞ் செய்யத்
திரைவி லாசக் கடற்கரையிற் சேர்ந்த குமரீ! பெருமாட்டீ!
* விரைவில் விழைந்த பொருளையருள் விமலை யமலை உனைத்தொழுதேன்
புரைவி லக்கிப் புனிதவுளம் பொருத்தி யென்னைத் திருத்தாயோ! (6)

தாயே! கன்னிக் குமரீ! யுன் தரிச னத்தைப் பெறுவதற்கு
நாயேன் என்ன தவஞ் செய்தேன்! நல்ல நல்ல கனியிருக்கக்
காயே கவருங் கள்வனைப்போற் காலங் கழித்தே திரிதருவேன்!
தீயேன் தீய நெறிவிலக்கிச் சிறந்த பூதி தருவாயே. (7)

## III. காட்சிக் குறிப்பு

கரிய கடல்தான் நம்முடைய வாழ்க்கைக் கடலைக் காட்டமெதிற்
பெரிய அலைகள் துக்கசுக பேதப் பிறழ்ச்சி யதைக்காட்டும்

---

* வடமொழியில் "சீக்ரசித்திப் பிரதாயநி"—என்பது அம்மை திருநாமம்.

உரிய பிறவி எண்ணிலதென் றுண்மை காட்டும் மணற்குவியல்
அரிய அறிவின் ஒளிகாட்டும் அம்மை குமரி மூக்குத்தி. (8)

கன்னிக் குமரீ நீயுமுன்றன் காதற் புதல்வன் திருச்செந்தூர்
தன்னிற் பொலியும் முருகனுமே சகத்தோர்க் குண்மை காட்டுபவர்,
அன்ன வகையெங் ஙனமென்னில் ஆசைக் கடலின் அலையொடுங்கும்
தன்னே ரில்லாக் கரையருகே சத்தைக் காண்பீர் எனத்தெரிப்பீர். (9)

பாசக் கடல்தான் படஎழும்பி பரம னருளாங் கடல்கலக்க
நேசத் திரைகள் மிகவீசி நெருங்கு முனையில் உறுஞ்சத்தி
தேசத்தோரே அறிமினெனத் தெரிக்குங் கடல்கள் சந்திப்புப்
பூசைத் தலமாங் குமரிநகர் போற்றிப் பணிமின் பணிமினே. (10)

## ஷை பாடல்களின் கருத்துரை.

1. கன்னிக் குமரித் தலத்திற் கடலின் நீலநிறத்தைக் கண்டதும், சிவபிரானது நீலகண்டத்தின் நீலமும், முருகர் மயிலின்கழுத்தின் நீலமும் நினைவுக்கு வர அவைதமை நினைந்து தொழுதேன்.

2. கடலின் ஒருபாங்கர் அதன் பச்சை நிறந் தெரிய, கன்னிக் குமரி, மயில், திருமால், வள்ளியம்மை இவர்கள் நிறமெலாம் பச்சையென்னும் நினைவு வரப்பெற்று மகிழ்ந்தேன்.

3. கன்னி கோயில் அருகில் கடலின் அலைகள் கவிழ்ந்து புரளல் அத் தேவியை வருணதேவன் வணங்கி வணங்கி எழுதல் போலத் தோற்றிற்று.

4. கடலின் நடுவில் ஒரு பாறை, அலைமோதினும் அசைவற்றிருத்தலைக் கண்ணுற்றபோது, வாழ்க்கைக் கடலிற் பாசங்கள் தாக்கினும் பத்திநிலை யூன்றப் பெற்றோர் மனம் இறைவன் திருவடியையே சிந்தித்து அப்பாறையைப் போலக் கலங்காதிருக்கும் என்னும் உண்மை தெரிந்தது.

5. தேவியின் கருணை முகமும், திருவடிவில் உள்ள நகைகளின் ஒளியும், சந்நிதானத்துள்ள விளக்குகளின் ஒளியழகும் என் மனத்தைக் கவர்ந்து பேரின்பந் தந்தன.

6. சிவபிரானை மணத்தல் வேண்டிக் கடற்கரையிற் றவஞ் செய்யும் தேவீ! வேண்டுவோர்க்கு விரைவில் வரம் அளிக்கும் பெருமாட்டி! என் குற்றங்களை நீக்கி எனக்கு மனத்தூய்மை தந்தருள்; இதுவே எனக்கு வேண்டும் வரம் எனத் தொழுதேன்.

7. கனியிருக்கக் காய் கவருங் கள்வனைப்போலத் திரியும் நான் தாயே! உன் தரிசனம்பெற என்ன புண்ணியஞ் செய்தனன்' எனக்கு நல்வழியில் இருக்கும் வரத்தைத் தந்தருள்.

8. நமது வாழ்க்கை (சமுசாரம்) நிலையாதது என்பதை இந்த நிலையாத *சமுத்திரம் காட்டுகின்றது. இந்தச் சமுத்திரத்தின் அலைகள் துக்க சுக அனுபவங்கள் மாறிமாறி வருதலைக் காட்டுகின்றன. பிறவி எண்ணிலது என்பதைக் காட்டும் கடற்கரையிலுள்ள மணலின் எண். அறிவின் நிஷ்கள (மாசற்ற) ஒளியைக் காட்டும் குமரியின் பேரொளி வீசும் மூக்குத்தி.

9. கன்னிக் குமரியும் செந்தூர் முருகனுமே உண்மை நிலையைக் காட்டுபவர். எனெனில், எங்கு ஆசை அலை ஒடுங்குகின்றதோ அங்குத் தான் அறிவு எழுந்தருளும் என்னும் உண்மையை அலைவீசியொடுங்கும் கரையில் வீற்றிருந்தருளிக் காட்டுகின்றனர் இருவரும்.

10. கீழ்க்கடலே பாசம். தெற்கேயுறும் பெருங்கடலே இறைவன் அருள். இறைவன் அருளாகிய பெருங்கடல் பாசமாகிய கீழ்க்கடல் புடைபட்டொடுங்க மேல் எழும்பி அதனைக் கலந்து அன்பாகிய அலைகளைக் கிளப்ப, அந்நிலையில்தான் (பரா) சத்தியின் காட்சி விலாசம் கிடைக்கும் என்னும் உண்மையைக் கடல்களின் சந்திப்பு நிலையிற் காட்டும் புநிதபூமியாகிய குமரிநகரைப் போற்றிப் பணிவோம்-வம்மின் ஜகத்தீரே!

---

# 'மணிவாசகரும் கண்ணப்பரும்'

[தமிழ்ப்புலவர் திரு. அ. மு. சரவணமுதலியாரவர்கள்]

(சிலம்பு அ: எ௨௧-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, மேலைநாட்டறிஞராகிய ஜி. யூ. போப் என்னுந் துரைமகனார் திருவாசகப் பெருமையை எங்ஙனம் அறிந்து வைத்தா ரென்பதை நோக்குழி, தமிழ்மக்களென்று தம்மை நினைத்துக்கொண்டு அவிழ்ச் சுவையே யன்றித் தமிழ்ச் சுவையைச் சிறிதேனும் அறியாத தம்பங்கள் பலவும் வெட்கித்

---

* "நிலையாத சமுத்திரமான சமுசாரம்" (திருப்புகழ்)

தலைகுனிய வேண்டாவோ! அப்புலவர் பெருமகன் என்ன சொன்னார்? தம் உயிர் உடலினின்று பிரியுஞான்று தம் அருகிலிருந்த நண்பர் பலரையும் நோக்கி 'நண்பர்காள்! யான் இறந்தபின் நீவிர் எனக்குப் பெரியதொரு கல்லறை கட்டவேண்டுமென்பதில்லை; சிறிதாகக் கட்டினாற் போதும். ஆனால் அதனை ஆக்குதற்குரிய பொருள் மாணிக்கவாசகர் பிறந்த தமிழ் நாட்டுப் பொருளாயிருத்தல் வேண்டும்; அது கொண்டு கட்டி அதன் கண் தமிழ் மாணவன் என்று எனது பெயரைக் குறித்து விடுங்கள்; அந் நாட்டுக்கு எனது கருத்தைத் தெரிவித்து அங்கிருந்துவரும் பொருள் எத்துணைச் சிறிதாயிருப்பினும் அது கொண்டு கட்டி விடுங்கள்' என்று வேண்டினர்; அவ்வாறே அறிக்கை ஒன்றுவர அதுகாலை சென்னையிற் கல்லூரியிற் படித்த மாணவர்களிற் பலர் பொருளுதவி செய்ததாகவும், தாம் சிறிது உதவி செய்ததாகவும் திருவாளர். திரு. வி. கல்யாண சுந்தர முதலியாரவர்கள் 'நவசக்தி' ஆசிரியர் காரையிற் சொற்பொழிவாற்றிய ஞான்று கூறினர். மேற்காட்டிய செய்தி அவர் கூறியதுதான்.

இங்ஙனம் பல அறிஞராலும் போற்றப்பட்டு வரும் பேரன்பராகிய மணிவாசகனார் தமக்கு ஒரு சிறிதும் இறைவன் மாட்டு அன்பில்லை எனப் புடைபடக் கவன்று "கண்ணப்பர் அன்புண்மையிற் றலைசிறந்தவர்; அதுபோலவே யான் அன்பின்மையிற் றலைசிறந்தவன்" எனக் கூறியதோடமையாது,

"ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பிலை"
"அலவா நிற்குமன்பிலேன்"
"நெகுமன்பில்லை நினைக்காண"
"இல்லை நின்கழற்கன்பதென்கணே"

"நான்றனக்கன்பின்மை நானுந்தானு மறிவோந் தானென்னையாட்கொண்ட தெல்லாருந்தாமறிவர்" எனத் தமக்கு இறைவன் திருவடியின் கண் ஒருசிறிதும் அன்பின்மையைத் தெரிவித்தருளுகின்றனர்.

இங்ஙனம் தமது அன்பின்மையைப் பலபடப் பாரித்துக்

கூறிய அடிகள் அந்த அன்பினை அருளுமாறு ஆண்டவனை நோக்கிக் குறையிரத்தல்,

"நின்றன் வார்கழற் கன்பெனக்கு, நிரந்தரமாயருளாய்"
"இடையறுவன் புனக்கென், ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்"
"அன்புநின் கழற்கணே, புணர்ப்பதாக"
"மெய்கலந்தவன்பரன் பெனக்குமாக வேண்டுமே"
"வேண்டு நின்கழற்கணன்பு"
"மெய்யன்பையுடையாய் பெறநான் வேண்டுமே"
"தொண்டனேற்கு முண்டாங்கொல், மிக்க அன்பே மேவுதலே'
"பெறவே வேண்டு மெய்யன்பு"
"அடியாருனக்குள்ள அன்புந்தாராய்"

எனவரூஉந் திருவாசகங்களால் அறியக் கிடக்கின்றது.

பேரன்பராகிய நமது பெரியார் இங்ஙனம் கூறியவற்றைக் கொண்டுதான் கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச அடிகள், "அருங்கவிவாத வூரனேமுதலோ ரன்பிலேமென்றது வேண்டி, இரங்குதல் பொய்ம்மை அன்பிலேனெனயா னிரங்கலே மெய்யெனக் கருளாய்" எனத் தாமியற்றிய 'சோணசைல மாலை'யிற் கூறிவைத்ததூஉ மென்க.

இனி, 'அடிகள் ஒரு பேரன்பராக இருந்துகொண்டு தமக்கு அன்பில்லை எனக் கூறினவாற்றால், அச் சிவப்பிரகாச ஞர் கூறியவாறே ஏன் அவரை ஒரு பொய்யர் என்று கூறுத லாகாது' என்னின், அறுநூற்றைம்பத்தெட்டுப் பாடல்களடங் கிய திருவாசக மென்னும் ஒரு சிறுநூலின்கண் சற்றேறக் குறைய முப்பத்திரண்டு இடங்களில் பொய்யைக் கடிந்து கடிந்து கூறும் நமது 'பொய்யடிமையில்லாத புலவர் பெருமான்' "பொய்யிருள் கடிந்த மெய்ச் சுடரே", எனத் தம்மாலழைக்கப் பட்ட சிவபெருமான் திருமுன் நின்று பொய் கூறினரெனல் எங்ஙனம் பொருந்தும்? பொருந்தாது; பொருந்தாது.

அச் சிவப்பிரகாசனார் கருத்தும் அது அன்று என்பது,

" பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெரூரினழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே

பேயென் பெருது பெற்ருர் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே"

என 'நால்வர்நான்மணிமாலை'யில் அவரே மணிவாசகனுர் திரு முன் நின்று கூறுமாற்ருல் நன்கு அறியலாம். இதில் அவர் கருத்து அது அல்லவாதல் தெரிவதோடு மணிவாசகர் அன்பில்லை யெனக் கூறியதற்குக் காரணமும் விளங்குதல் காண்க.

(தொடரும்)

# உள்ளப்பயிற்சி

[திரு. ச. கி. சுந்தராசாரியனவர்கள்]

## I நூலறிவு

தற்காலங்களிற் புத்தகங்களின் மூலமாய்க் கல்வி யறிவு பெரும்பாலும் புகட்டப்படுகின்றது அறிவுக்குப் புத்தகங்கள் நிச்சயமாகவே மிக்க பயன்படத்தக்க வுதவிகள். கைத்தொழிற் பயிற்சிக்கும் நாகரிகத் தேற்றத்துக்குங்கூட அவை சிறிதளவு பயன்படும். ஆனுலவை யனைத்து மொருபோதும் மனேபி விருத்திக்கேற்ற முதன்மையான வியற்கை யூற்றுக்களாகா. இவைகளின்றி அமையாதனவாகிய கலைப்பிரிவுகளினும் இவைகளினுற்றல் மிகவும் பாரித்துரைக்கத் தகாதென்பது எமது கருத்து. எவ்வாருயினு மவைகள் புதுவது படைக்கு மாற்றலுடையனவல்ல. அவை யனைத்துங் கல்வி யறிவின் தேர்ச்சிக்குற்ற துணைக்கருவியாமே யன்றி வேருகா. தூரதிருஷ்டிக் கருவியும் அணுதரிசனியும் நமதாராய்ச்சிகளிற் புதிய புதிய நினைத்துமிராத ஆச்சரியங்களைப் புலப்படுத்துகின்றன. ஆனுலிவைகளை யடிக்கடிப் பயன் படுத்துவதனுல் மருண்டு நாம் நமது கண்களை உபயோகிப்பதனு லெய்தும் பயனை நன்குமதித்துப் பாராட்டாமலிருக்கக் கூடாது. இவ்விரண்டையும்போலவே புத்தகங்களும் நமக்கு இயற்கையின் கூர்மையான முன்னறிவினு லுதவிகளாகக் கிடைத்திருப்பனவற்ருேடு சேர்ந்த செயற்கைக்

கருவிகளேயாம். உயிர் வாழ்க்கை, அனுபவம், தாமே சிந்தித்தல் உணர்தல், அறிந்து கொண்டபடி நடத்தல், இவைகளே அறிவுக்கு முதன்மையுந் தகுதியுமுள்ள மூலங்களாகுமே யன்றி நூல்கள் அன்னண மாகாவாம். இவற்றைக் கைக்கொண் டொருவன் மேற்புகுவானாயின் புத்தகங்கள் அப்பொழுதே அவனது மனத்திற் பல வெள்ளிடைகளை நிரப்பித் தவறான வெண்ணங்களுட் பலவற்றைத் திருத்திக் குறைவாயின பற்பலவற்றையும் பூரணமாக்கும். ஆனாலொருவன் தான் மேற்புகுதற்கு வாழ்க்கையி லனுபவமில்லா திருப்பானாயின் அவனுக்குப் புத்தகங்கள் உழுது நெகிழாத கட்டாந்தரையில் வீழு மாரியும் வெயிலும்போற் பயனற்றனவாம்.

சாலறி வூற்றினிற் றதும்பி மேலெழும்
நூலைத்தூ நதியென நுவலு கோவதன்
மேலொரு வாய்ப்புன னீரின் வேட்கையை
யேலநன் கென்றென்று மினிதிற் றீர்க்குமால்
அத்தகை யறிவுடை யவனொ ருத்தனே
மெத்தவுந் தூண்டிமேன் மேலு மோங்குறு
முத்தமச் சாத்திரத் துற்ற வன்மையை
நித்தமு முணர்தர னேரு மேயன்றோ ?

இஃது ஒருவாறு செய்யுணடையி லமைக்கப்பட்டிருப்பினும் பொதுவான தொரு சிறந்த வுண்மையை அடக்கிக்கொண் டுளது. தாதுக்களொன்றையேனும் பார்த்திராத மனிதனொருவனுக்குத் தாது பரீக்ஷண சாஸ்திரம் நுட்பப்பொருளை வெளிப்படுத்திக் காட்டாமையாற் பயன்படாதவாறுபோல, கவி சரிதமுஞ் செய்யுட்களும் வாழ்க்கை யென்பதின்ன தென் றறியாத கேவல வித்தியார்த்திகளுக்குப் பயன்படாவாம். இனிய வோசையிற் பழக்க மில்லாதானுக்குச் சங்கீதப் பிரசங்கமும் பயன்படுவதன்று, ஆத்தும பக்தியாதல், வாழ்க்கைத் தூய்மையாதல் இல்லாதவனுக்கு வேதப் பிரசங்கங்களும் பயன்படாவாம். நூலறிவெல்லாம் பிரதிபலித்து எதிரொலி போன்று புறவழித்தாய் வருகின்றது. மெய்யறிவு நினைத்தலாற்றலை யுடைய ஆன்மாவினின்றும் உலராத வேரூன்றி வளர்கின்றது.

புறப்பொருள்களு ளெதனைத்தான் கொள்ள வேண்டினுங் கேவலங் கடன்கோடல் போலாது, உயிருள்ள வோரவயவி யானது தன்மயமாக்கிக் கொள்ளுமாறு உட்கொள்ளுகின்றது.

## II ஊன்றிய நோக்கம்.

ஆதலான் வாலிபர்கள் கற்கத் தொடங்கும்போது நூற் கூற்றினுணர்ச்சியையே யெப்பொழுதும் மேற்கொண்டு புகாமல், தங்களாலியன்றமட்டும் விஷயங்களைப்பற்றிய நேர்மையான வூன்றிய நோக்கத்தோடு படிக்க வேண்டுமென்று யாம் அறிவுறுத்துகின்றோம் "உற்று நோக்குதல் எவ்வாறு?" என்று தலைக் குறியிட்ட சிறந்த நூலொன்று வரையப்பட்டுளது; இம் மும்மொழிகளும் நம்முடைய கல்வித் தொடக்கத்திற் சிறந்த பகுதியில் நம்மை வழி நடத்துங் கட்டுரை யாகலாம். அற்றேல் இப்பகுதி அந்தோ! மிகப் பரிதபிக்கப்படத் தக்கவாறு கவனிக்கப்படா தொழிகின்றது! மனத்தின் கண்ணே பல்வகைப்பட்ட உயர்ந்த வழகிய பொருள்களை மிகுதியாய் நிரப்புதன் மாத்திரையிலே யன்றி யெல்லாத் தொழில்களினு மிகப் பயன்படத் தக்க கண்களை யுபயோகப்படுத்துவது யாங்ஙனென்பதையும் போதிப்பதனால் இயற்கைகளெல்லாம் விசேஷ மதிப்புடையனவாய் வழங்குகின்றன. நமது கண்களை நன்றாகத் திறந்து கொண்டு போகும்போதே ஒன்றையேனுங் கவனித்துக் காண்கின்றே மல்லேமென்பது மிகவு மதிசயமே. இஃதெவ்வாறென்றாலோ, கட்பொறியும் மற்றையன போலப் பயிற்சியடைய வேண்டும். பழக்கக் குறைவானும், அடிமைத் தனமாய்ப் புத்தகங்களையே சார்ந்திருத்தலானும் இப்பொறி மழுங்கி, மந்தமாகி இறுதியில் தனதியற்கைத் தொழிலையுஞ் செய்தற்கு இயலாததாய் விடுகின்றது. தாங்கள் காண்பன இன்னவென்றறியவும், கவனியா விடத்துக் காணாத்தவறக் கூடியனவற்றைக் காணவுமே கற்பிக்கப்படும் பாடங்களனைத்தும் பள்ளிக்கூடங்களினும் கலாசாலைகளினும் முதன்மை யுள்ளனவாகக் கருதப் படட்டும். நிலைத்திணைப் பொருணூல், விலங்கியனூல், தாதுபரீக்ஷண சாஸ்திரம், பௌமிய சாஸ்திரம், ரசாயன சாஸ்திரம்,

சிற்ப நூல், ஓவிய நூல், நற்கலை, இவையனைத்தும் மிகப்பயன் படற்பாலனவாம். காட்சி யறிவு புகட்டு மிந்நூல்களின் இன்றி யமையாத வுணர்ச்சி சிறிதேனு மில்லாமையால் மிக்க நூற் பயிற்சி வாய்ந்த சிறுவர்களுக்கு எத்துணையோ பல தேசங் களின் காட்சியும் ஒத்து நோக்குமிடத்துப் பயனிலவாயின!

## III. பாகுபாடு.

ஊன்றிய நோக்கம் நன்றே; அதனினும் நன்று நேரிய வூன்றிய நோக்கம். ஆயினும் இப்பிரபஞ்சத்தின் கண்ணே பல் வேறு வகைப்பட்ட பொருள்களிருத்தலால் அப்பொருட் டொகுதிகளை மனத்தினதிகாரத்தினுள் வைத்தடக்கிச் சீர்ப் படுத்துவதற்கு ஏற்றதோ ருறுதியான வழியிலதாயின் உற்று நோக்குந் திறமை அமிழ்ந்து கலக்கமுறு மென்ப தொருதலை. நாம் பாகுபாடு என்றுரைப்ப தெல்லாம் இவ்வொழுங்கு படுத் தும் முறையையேயாம். கடவுள் பேரறிவின் தோற்ற மாகிய உலகெங்கணும் அது தெளிவாய் விளங்குதலின் மனிதன் பகுத் தறிவினாற் கண்டுரைக்கக் கூடியதேயாம். இப் பாகுபாடு இறைவன் தன் பேரறிவினாற் பொருள்கள் யாவற்றினிடத்துஞ் சார்த்தியிருக்கின்ற முதன்மையான வகுப்பொருமையைப் பற்றியதாம். வெளித் தோற்றத்திற்கெல்லாம் மிகவும் வேறு படுவன போலும் பொருள்களுட் பொதுத்தன்மை படைத்துக் காட்டலில் இவ்வொருமை தானே விளங்கும். நுட்பமாய் உற் றறிகிற கண்களினாற் பற்றப்பட்டுழி, இப்பொதுத் தன்மைகள் தாமே இவ்வுலகினிற் காணப்படும் மிகப் பலவகைய வேற்றுமை யுள்ள பொருள்களையும் பெரிதுஞ் சிறிதுமாகிய அளவுள்ள பொதுவினம் சிறப்பின மென்றுரைக்கப் படுகிற சில ஈட்டங் களாகப் பகிர்வதற்கு உற்ற துணைகளாகும். பொருள்களைத் தேர்ந்து சீர்தூக்கி ஒவ்வொன்றின் நலமிஃதென்றும் அலதிஃ தென்றும் பகுத்தறியும் மனமுடையானுக்கு இவ்வினங்கள் தம்மியல்பிலேயே விளங்குவனவாம். ஆதலின், மாணக்கனது முதற்கடமை தான் காணுமனைத் தினுமுள்ள பொதுத் தன்மை களைக் கவலையுடன் உற்று நோக்குதலே யன்றி மிகவும் வெளிப்

புடையாய்த் தோற்றும் வேறுபாடுகளையும் குறிக்க வேண்டு வதே. ஏனெனில், விடயங்களின் வேற்றுமை நயங்கள், சாயல் ஒளியுடன் செல்லுதல் போலப் பொதுத் தன்மைகளோடும் ஒருதலையாய் உடனியலுகின்றன. அவைகள் தாமே ஒருண் மைப் பொருளாகாவிடினும் ஒரு பொதுவினத்தை மற்றொன்றி னின்றும், ஒரே பொதுவினத்தின்கணடங்கிய சிறப்பினத்தை மற்றையவற்றினின்றும் பிரிக்கின்றன. எல்லாப் பொருள் களின்கண்ணும் நாடவேண்டிய பாகுபா டல்லது முறை, இயற்கை ஒழுங்கு எனப்படும். மொழி யகராதியின்கணுள வார்த்தைகளின் ஒழுங்கு போலாதல், லின்னீயன் என்பவரது முறைமையின்படி நிலத்திணைப் பொருணூலிலுள மலர்களின் நிரை போலாதல், செயற்கை முறைப்பாடுகளெல்லாங் கற்கப் புகுபவர்களுக்குத் தொடக்கத்திற் பயப்படத் தக்க உதவிகளாக லாம். ஆயினும், தனித்து அவையிற்றையே சார்ந்து உப யோகித்தா லவைகள் மெய்யறிவுக்கு இடையூறுகளாயினுமாகும். இயற்கைப் பொருத்தத்தினியைபுகளின்படி பொருள்களைச் சேர்க்கும் பயிற்சி யடைதலை ஒவ்வொரு சிறுவனும் குறிக் கொளல்வேண்டும். சிறப்பியல்புகளைப் யற்றிய நேரிய ஊன் றிய நோக்கத்தோடு பொது விளைவுகளைப்பற்றி நுனிப்புன் மேய்ச்சல்போன்ற நோக்கமும் கலந்திருந்தாலொழிய அப் பழக்க மடைத லியலாது. நீர்க்குமுதம் தனது பெயரினாற் குமுதவினத்தோடு உண்மையாகவே யாதோரியைபு மில்லா திருப்பினும் அதன்கண் ஒருவகையாமென்பது தோற்று வித்தல் போலச் சாமானிய சனங்கள் இட்ட மலர்களின் பெயர்களும் புறத்தியலும் ஒற்றுமை பற்றியே யன்றி ஆராய்ச்சி முதிர்வின்கண் ஏற்பட்டனவல்ல. செடி கொடிகளின் குணத் தையும், உறுப்புகளையும் நுட்பமாய் உற்று நோக்கிய நிலத் திணைப் பொருணூல்வல்லனே, அவ்வாறன்றி நீர்க்குமுதத்தைக் கசகசாவினத்தி னுட்படுத்தித் தானவ்வாறு செய்தற்குத் தக்க காரணங்களையும் நமக்கு எடுத்துக் காட்டுவான். தேச சஞ் சாரம் மிகவும் எளிதாகிய இக்காலத்தில், உற்று நோக்குதற் பயிற்சி அடைதற்கு உதவியாக வாலிபர்கள் சமயம் நேரிடும்

போதெல்லாம் தத்தம் நாட்டின்கணுள்ள பொருட் காட்சிச் சாலைகளைப் போய்க்காண ஒருபொழுதும் தவறக் கூடாதென் றும், ஆங்குச் சென்றுழி, அவ்விடத்திற் குரித்தாகிய சிறப் புடைப் பொருளினிடத்திலேயே பொதுவாய்த் தங்கள் சிந்தை யைச் செலுத்தவேண்டுமென்றும், யாம் அறிவுறுத்தவேண்டும்.

பொருந்திய வனைத்தையும் பொதுவிஞேக்கினுற் றிருந்திய மனத்தினிற் சிறிது மில்லையாம்.

ஞானபோதினி.

---

# ஆய்ச்சியர் குரவை.

[திரு. அ. நடராஜ பிள்ளை அவர்கள்]

(ஒன்பதாஞ் சிலம்பு ௬௮-ம் பக்கத் தொடர்ச்சி)

மாதரி கொண்டாடிய விக் கொண்டாட்டம், பொது மக்க ளிடையே அக்காலத்திற் பரவியுள்ள தெய்வ வன்பும், கடவு ணம்பிக்கையும் எத்திறத்தன வெனப் புலனுக்குகின்றது. நற் குறிகள் தீக்குறிகளாகிய சகுனம் பார்க்கும் முறையில், அக் காலத்தவர் கொண்ட நம்பிக்கையும், அந்நம்புதலுக் கேற்ற பய னுறுதலு மிங்குத் தெளிவாகின்றன. இக்குரவை யடி பெயர்த் தாடுங் கூத்தெனினும் சிலப்பதிகார வாசிரியராகிய இளங் கோவடிகளும் அதன் உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லா ரும் இதனை நாடகமெனக் கூறுகின்றனர். அங்ஙன மவர்கள் கூறுதற்கு, ஆயர்பாடியில், கண்ணன் ஆடிய கூத்தினை யாய்ச் சியர் கைக்கொண்டு நடித்தலும், கூத்தாடுங் கன்னியர்க்கு மாய வன் முதலிய பெயர்கள் வகுத்தலும், யாழின் முறைகளைக் கைக்கொள்ளுதலுங் காரணங்களாம் போலும். குரவை நாட கம் எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடுங் கொள் கைத்தாம்.

இக்குரவை யெழுவர் கைகோத்தாடுங் கூத்தாம். இது, யாழ் நரம்புகளின் முறைகளைப் பற்றிப் பாடி யாடப் படுதலின்

மற்றையதினுஞ் சாலச் சிறப்புடைத்தாம். மாதரி, குரவையாட வந்த வெழு கன்னியரையும்,

க. "காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ்
வேரி மலர்க்கோதை யாள்,"

உ. "நெற்றிச் செகிலை யடர்த்தாற் குரியவிப்
பொற்றொடி மாதரா டோள்,"

௩. "மல்லன் மழவிடை யூர்ந்தாற் குரியளிம்
முல்லையம் பூங்குழ ளுன்,"

௪. "நுண்பொறி வெள்ளை யடர்த்தாற்கே யாகுமிப்
பெண்கொடி மாதர்தன் தோள்,"

௫. "பொற்பொறி வெள்ளை யடர்த்தாற்கே யாகுமிந்
நற்கொடி மென்முலை தான்,"

௬. "வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக்
கொன்றையம் பூங்குழ லாள்,"

எ. "தூநிற வெள்ளையடர்த்தாற் குரியளிப்
பூவைப் புதுமல ராள்."

என வெடுத்துக் காட்டி, "முல்லைக் கோதையையுடைய இவ் விளங்கன்னிய ரெழுவருந் தொழுவிடத்து ஏழிளங் காளைகளை வளர்த்து வருகின்றனர்." என்று புகழ்ந்தது, குரவைக்கூத்துப் பெரும்பாலுங் கொல்லேறு தழுவுதலோடு நெருங்கிய வுற வுடைத் தென்பதை வலியுறுத்துகின்றது. மேலும், ஆயர் ஆய்ச்சியர்க்குக் கொல்லேறு தழுவிய பின்னரே குரவையாடுதற் கண் பேரூக்கமுண்டா மாதலின், மாதரி குரவை மகளிரை யிங் ஙனங் கொண்டாடலாஞ ளெனவுங் கொள்ளக் கிடக்கின்றது.

பின்னர், அவள், பாலைப் பண்கள் நான்கனுள் ஒன்றாகிய வட்டப்பாலைப் பண்ணைப் பாட வேண்டி முன்னர்க் காட்டி யாங்கு ஆர்கள் நிறைந்த வாழி யொன்று வரைந்து பன்னிரண் டிராசிகளையும் பொருத்தி யிடப முதலிய வேழு இராசிகளிலுங் குரல் முதலிய யாழ் நரம்புக ளேழின் பெயர்களை யவ்வேழு கன்னியர்க்கு மிட்டு நிறுத்தினள். இக்கூத்து, கண்ணன் ஆயர்

பாடியி லாடிய வால சரிதை நாடகங்களு ளொன்று மாகலின், குரல் முதலிய பெயர் கொண்ட கன்னிய ரெழுவர்க்கும்,

> "மாயவ னென்றாள் குரலை விறல்வெள்ளை
> யாயவ னென்று ளிளிதன்னை, ஆய்மகள்
> பின்னையா மென்றாளோர் துத்தத்தை மற்றையார்
> முன்னையா மென்றாண் முறை";

எனப் படைத்துக் கோட் பெயரிட்டாள். மேற்கண்ட இளங் கோவடிகள் வாய் மொழிக்கு அடியார்க்கு நல்லாருரை கிட்டா மையின், "மற்றையார் முன்னையா மென்றாண்முறை," என்ப தற்கு "மற்றை நால்வரும் பிஞ்ஞைக்கு முறைமையினில் மூத்த வர்களாகிய அசோதை, ருக்மணி, வாருணி, இரேவதிகளாவர்," எனப் பொருள் கொள்ளப் பட்டது. இக்கொள்கையைப் பின் னர் வரும், "முந்தையாகிய 'அசோதை,' என்னும் தார நரம் பிற்கு வலப் பக்கத்தே, 'விளரி,' நின்றது," என்ற அடியார்க்கு நல்லாருரை சிறிது வலியுறுத்துகின்றது. இங்ஙனம் இன்றி யமையாத வாய் மொழியின் பொருள் மறைந்தது மிகவும் வருந் தத் தக்கதாம். பிஞ்ஞைக்கு அசோதை மாமியும், ருக்மணி மூத்தாளும், வாருணி இரேவதி யிருவரும் முதிய மைத்துனன் (வெள்ளையன்) மனைவியரு மாகின்றமை யிங்குக் கருதவேண்டிய தாம்.

இனி, மாயவனுக்கும் வெள்ளையனுக்கும் இரு புறங்களிலு முள்ள விராசிகள் வறியனவாக, பிஞ்ஞை அசோதை இரேவதி வாருணியாகிய நால்வரும் முறையே மாயவன்பாலும் வெள்ளை யன்பாலும் வெட்கி விலகி நிற்றலும், ருக்மணி தனது வலது புறமுள்ள மகவிராசி வறிதாகும்படி தனதிளையாளாகிய பிஞ் ஞையை வெறுத்து விலகி நிற்றலும், அவற்றிற் கியைய அவ் விராசிகள் நரம்புடனியங்கா நலமுங் கண்டு களிக்கற்பாலன. அங்ஙனம் பொருந்திய கன்னியரில் மாயவன் பெயர் கொண்ட மங்கைக்கு மாதரி துழாய் மாலையிட்டுப் பெருமைப் படுத்தியது, கண்ணன் பால் அவள் கொண்ட கழிபேரன்பை யெடுத்துக் காட்டுகின்றது. அப்பெண்கள் செந்(சம) நிலையில் நின்று தம்

மூன் நண்டுக்கை கோத்துக் கொண்ட முறையானது கை கோத்தாடுவார்க்கு எவ்விதமான விடையூறு மின்றி நெடுநேர மாடுதற் கண்ணும் கைந்நோய் தோன்றாக் கற்புடை வழியாம். இதனை யாவருந் தம்மில் நிகழ்த்திக் காணலாம்.

பாலை யென்னும் பண்ணானது ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலை யென நான்கு வகைப்படும். இவற்றுள், வட்டப்பாலை யென்னும் பண்ணே யிக்குரவையுட் கொள்ளப்பட்டதாம். வட்டப்பாலை யென்பது முன்னர் வட்டப்பாலை மண்டலத்திற் குறிப்பிட்டாங்கு நரம்புகளை யாழில் அமைத்து ஒலிக்கச் செய்து பண்ணை யுண்டாக்குவதுபோலும். இக்கால வீணை முதலிய விசைக்கருவிகளிற் காணப்படும், 'ச, ரி, க, ம, ப, த, நி,' என்னு மேழொலிகளும் அக்கால யாழில், 'தாரம், உழை, குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை,' எனப் பெயர் கொண்டு வழங்கின. இவற்றினையே யாழின் நரம்புகளே ழெனவுங் கூறுப. இவ் வட்டப்பாலையில் தாரவொலி யடுத்து உழையொலி தோன்றின் பாலையாழ்ப் பண்ணும், உழை யொலி யடுத்துக் குரலொலி தோன்றின் குறிஞ்சி யாழ்ப்பண்ணும், குரலொலி யடுத்து இளியொலி தோன்றின் மருத யாழ்ப்பண்ணும், இளியொலி யடுத்துத் துத்தவொலி தோன்றின் நெய்தல் யாழ்ப்பண்ணு முண்டாம். குரல் நரம்பும் துத்த நரம்பும் இளி நரம்பும் தனித்தனி நான்கு மாத்திரையும், கைக்கிளை நரம்பும் விளரி நரம்பும் தனித்தனி மூன்று மாத்திரையும், உழை நரம்பும் தாரநரம்பும் தனித்தனி யிரண்டு மாத்திரையு மொலிக்கும்.

மேற்குறித்த பாலையாழ்ப்பண் முதலிய நான்கனுள்ளே ஏழு பாலை யிசைகள் தோன்றும். அவை படுமலைப் பாலை, செம்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை யென்பனவாம். அவற்றுள், படுமலைப் பாலையாவது, துத்தங் குரலா (முதன்மை யொலியா)ய்ப் பொருந்தி வருவதாம்; அதாவது, குரல் நரம்பின் மாத்திரை நான்கிற் பகுதியாகிய விரண்டினை யெடுத்து விளரி நரம்பிற்

கொன்றும் கைக்கிளை நரம்பிற் கொன்றுமாகச் சேர்த்தும், இளி நரம்பின் மாத்திரை நான்கிற் பாதியாகிய விரண்டினை யெடுத்துத் தார நரம்பிற் கொன்றும் உழை நரம்பிற் கொன்று மாகச் சேர்த்தும், துத்த நரம்பின் ஒலியை முதன்மையாக்குவ தாம். முதன்மையாவது வேற்றொலி விரவாதும் தன்னொலி குறையாதும் வருதலாம். செம்பாலை குரல் நரம் பொழிந்த மற் றைய நரம்புகள் முன்கண்ட வண்ணம் வேற்றொலி விரவியும் தம்மொலி குறைந்தும் குரல் நரம்பொலி முதன்மைகொண்டு வருவதாம். செவ்வழிப்பாலை கைக்கிளை நரம்புமட்டும் முதன்மை யொலி பெற்று வழங்குவதாம். அரும்பாலை உழை நரம்புமட் டும் முதன்மை யொலி கொண்டு ஊர்வதாம். கோடிப்பாலை இளி நரம்புமட்டும் முதன்மை யொலி கொண்டியல்வதாம். விளரி நரம்புமட்டும் முதன்மை யொலிகொண்டு விளங்குவது விளரிப்பாலையாம். தார நரம்புமட்டும் முதன்மை யொலி கொண்டு வருவது மேற்செம்பாலையாம். இவையே வட்டப் பாலைப் பண்ணை யாழின்கண் பாடும்பொழுது மனக்கொள வேண்டியனவாகும்.

மாதரி, இக்குரவைக் கூத்தினுள் அப்பண்ணைப் பாட வேண்டி முற்குறித்தாங்கு வட்டப்பாலை மண்டலம் வகுத்து, எழு கன்னியரையும் நரம்புகளாக நிறுத்தி யவர்கட்கு மாயவன் முதலிய பெயர்களிட்டவுடனே, குரல் நரம்பு (மாயவன்) மந் தமா (பகுதி மாத்திரையா)க வொலிக்க, அதனை யடுத்து இளி நரம்பு (வெள்ளையன்) சமனு (முதன்மை யொலியா)க வொலிக்க, அதனை யடுத்துத் துத்த நரம்பு (பிஞ்ஞை வலி) (வேற்றொலி விரவிய) சுரமாக வொலிக்க, அதனையடுத்து விளரிநரம்பு (இரே வதி) வலிமையில்லாத மந்த (வேற்றொலி விரவலும் தன்னொலி சிறிது குறைதலுமான) சுரமாக வொலிக்கும்படி முல்லைத் தீம் பாணி பாடப்பட்டது. இதன்கண், குரல் நரம்பினை யடுத்து இளி நரம் பொலித்தலின் மருத யாழ்ப்பண்ணும், இளி நரம் பினை யடுத்துத் துத்த நரம் பொலித்தலின் நெய்தல் யாழ்ப் பண்ணும், துத்த நரம்பினை யடுத்து விளரி நரம்பொலித்தலின் முல்லை யாழ்ப்பண்ணும் வந்தன. வட்டப்பாலையில், இறுதி

யிற் கூறிய முல்லை யாழ்ப்பண் வரக்கூடாவேனும், இக்குரவை யாய்ச்சியர் பாடுங்குரவை யாதலாலும் பாடும்பாட்டு முல்லைத் தீம்பாணியாகலானும் பாலை யாழ்ப்பண்ணினையும் குறிஞ்சி யாழ்ப்பண்ணினையும் விலக்கி முல்லை யாழ்ப்பண்ணினைக் கொண்டனர். இங்கு, இளி நரம்பு வேற்றொலி விரவாதும் தன்னொலி குறையாதும் வர, மற்றைய நரம்புகள் வேற்றொலி விரவியும் தம்மொலி குறைந்தும் வருவதால் இளி குரலாய (முதன்மை யொலி கொண்ட) கோடிப்பாலை யிசையாம்.

(தொடரும்)

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

[திரு. M. V. நெல்லையப்பபிள்ளை அவர்கள் B. A.]

## அறவன் (கசு)

கடவுளைக் குறிக்கப் பண்டைத் தமிழர் வழங்கி வந்த சொற்களில் அறவன் என்ற சொல்லும் ஒன்று. அறவன் என்ற சொல் அறம் என்னும் பகுதியும் அன் என்னும் உயர்திணை ஆண்பாற் படர்க்கை விகுதியும் சேர்ந்து ஆகிய சொல். இது "மவ்வீ றொற்றொழிந் துயிரீ றொப்பவும்" என்ற நன்னூற் சூத்திர விதிப்படி அறம் என்ற சொல்லின் ஈற்றிலுள்ள மகர ஒற்றுக் கெட்டு அற என நிற்க அதனுடன் அன் சேருங்கால் வகர உடம்படுமெய் தோன்றப் பெற்று அறவன் என்றாயது. அறவன் என்ற சொல்லினால் பண்டைத் தமிழ் மக்கள் கொண்ட கருத்துக்களைப்பற்றி இக்கட்டுரையில் கருதுவாம்.

2. அறம் என்ற சொல்லுக்கு அடிச்சொல் (root) அறு என்பது. அறு + அம் அறம் என்றாகியது; வரை யறுக்கப்பட்டது என்பது அதன் பொருள். செய்ற்பாலதோறும் அறனே என்று திருவள்ளுவ நாயனார் கூறிய வண்ணம் எச்செயல் செயற்பாலது என்று கடவுளால் அல்லது கடவுளினது அருள் விளங்கப்பெற்ற பெரியோர்களால் வரை யறுக்கப்பட்டுள்ளதோ

அச்செயல் அறம் ஆகும். உள்ளம், நா, உடல்களால் (மனம் வாக்குக் காயங்களால்) உயிருக்கு உறுதி பயக்கும்படிச் செய்யப் படும் செயலெல்லாம் அவ்வாறு வரை யறுக்கப்பட்ட அறமா கும். உயிர்க்கு உறுதி பயவாத செயலெல்லாம் செயற்பால தன்றென மறுக்கப்பட்ட மறம் ஆகும். இற்றை ஞான்றும் மேற்கு நாட்டுப் பலவகைத் தத்துவ நூலார்கள் (Intuitionalists, Experientialists, Evolutionists, Utilitarians,) நன்மையாவது யாது (what is goodness) என்பதை வரை யறுத்துக் கட்டுரைக்க வழி அறியாமல் ஒருவர்க்கொருவர் பிணங்கி மறுத்துக்கொண்டிருக்க, பண்டைத் தமிழ் மக்கள், ஒருவரும் மறுதவண்ணம் “இகல் மனம் வாக்குக் காயத்தி தமுயிர்க்குறுதி செய்தல்” என்று அறம் (இதம்) என்பதனைக் கட்டுரை செய்தது அவர்கள் நுண்ணறிவைப் புலப்படுத்து கின்றது. அவர்கள் அறம் பொருள் இன்பம், வீடு என்ற நாற் பொருள்களும் மாந்தர்களால் உலக வாழ்வில் அடையப் பெறும் உறுதிப் பொருள்கள் என்றும் அவற்றுள் அறம் ஒன்றே இடையில் இம்மை மறுமை இன்பங்களையும் முடிவில் வீட்டின்பத்தையும் அடையச் செய்யும் முதன்மைப்பொருள் என்றும் அறிந்திருந்தார்கள் என்பது திருக்குறள் முதலிய பண் டைத் தமிழ் நூல்களால் நன்கு விளங்கும். இந்த நாற்பொருள் களையும் வடமொழியாளர்கள் தருமார்த்த காம மோக்ஷம் என் பர். இடைக்காலத்தில் இம்மை மறுமை யின்பங்களை உயிர் களுக்கு அடைவிக்கும் அறமானது உள்ளம், நா, உடல்களால் பயன் குறித்துச் செய்யப்படும் செயல்கள் என்றும் முடிவில் வீட்டின்பத்தை அடையச் செய்யும் அறமானது உள்ளம், நா, உடல்களாற் பயன் குறியாது தன்முனைப்பின்றி இறைபணி யாகச் செய்யப்படும் செயல் என்றும் பண்டைத் தமிழ் மக்கள் அறிந்திருந்தார்கள். வாழ்க்கையினது குறிக்கோள் இன்னது என அறியாது உடல் வாழ்க்கையே (Material life) பொருள் என மதிமயங்கி ஒழுகும் மேனாட்டு மாந்தர்களுக்கு அவர்கள் தங்கள் பொது வாழ்க்கையையும் (Public life) தனி வாழ்க்கை யையும் (individual life) சீர்செய்து செம்மைப் படுத்துதற்கு

அறமுதலிய நான்கு உறுதிப் பொருள்களையும் உணர்த்தும் திருக்குறள் நூல் வழிகாட்டியாயுள்ளது என்பது தெற்றெண (எவருக்கும்) புலனாகும். அறமானது பயன் குறியாது தன் முனைப்பின்றிச் செய்யப்படுங்கால் கடவுளினது செயலை அவனோடொன்றுபட்டு நின்று செய்யப்படுவதாகின்றது. அத் தகைய அறம் உள்ளத் தூய்மையையும் (சித்த சுத்தியையும்) அத்தூய உள்ளத்தில் ஒளியாய் விளங்கும் மெய்யுணர்வையும் பயக்கின்றது. ஆதலின் அறம் என்ற சொல் மெய்யுணர்வு (மெய்ஞ்ஞானம் அல்லது திருவடி ஞானம்) என்னும் பொருளை யும் குறிக்கின்றது.

"நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நாவலர் கேட்க நல்கிய நல்லறத்தை"

என்று திருஞானசம்பந்த அடிகள் அருளிய திருச்செய்ஞ் ஞலூர்த் தேவாரப் பாட்டில் நல்லறம் என்பது மெய்யுணர்வை (திருவடிஞானம்) உணர்த்துதல் காண்க.

3. மேலே கூறப்பட்ட அழியும் தன்மைத்தவாகிய இம்மை மறுமை யின்பங்களையும் அழியாது நிலை பெற்றுள்ள தாகிய வீட்டின்பத்தையும் அறம் வாயிலாக உயிர்கள் அடை யச் செய்கின்றவன் கடவுள் என்று பண்டைத் தமிழ் மக்கள் அறிந்திருந்தார்களாதலின் அவனை அவர்கள் அறவன் என்று கூறினார்கள்.

"இன்பதனை யெய்து வார்க்கீயு மவர்க்குருவம்
இன்பகன மாதலினு லில்"

என்று திருவருட் பயனில் கூறி யிருத்தல் காண்க. திருவள் ளுவ நாயனார் கடவுளை அறக்கடல் அல்லது அறச் சக்கரம் என்று பொருள் படுகின்ற 'அறஆழி' என்று கூறினார். சிவ பிரானுடைய ஊர்தியாகிய பெற்றமானது (இடபமானது) அற வடிவமாகும். அவனுடைய கொடியானது பெற்றக் கொடி (இட பக் கொடி)யாகும். மன்னன் ஒருவன் தனது அரசின் கீழ் வாழுங் குடிகளை மறங்கடிந்து அறம் வழாமல் ஒழுகி வாழும் படி செய்து இன்பம் அடைவிக்கும் தன்னுடைய ஆட்சி வெற் றியைக் குறிக்கக் கொடி நாட்டுதல்போல, சிவபிரானுடைய

பெற்றக் கொடியானது அவன் படைத்தல் முதலிய ஐந்தொழில் களையுஞ் செய்து உயிர்களைக் கட்டுக் காலமாகிய உலக நெறியில் இம்மை மறுமை இன்பங்களையும் கட்டு விடுதிக் காலமாகிய வீட்டு நெறியில் வீட்டின்பத்தையும் அறம்வாயிலாக அடையச் செய்து ஆண்டருளுகின்றான் என்ற உண்மையைக் குறிக்கின்றது. அறவன் அருள் வடிவமாகிய உமையம்மையாரும் எண்ணான் கறங்களையும் வளர்த்து உயிர்கட்கு இன்பந் தழைக்கச் செய்தலின் 'அறம் வளர்த்தாள்' என்று அழைக்கப்படுதலுங் காண்க.

4. இங்ஙனம் கூறியவாற்றால் இக்காலத்து நியாயவாதிகள் (Rationlists) போன்ற கொள்கையாளர்கள் கடவுளுண்மையையும் இலக்கணத்தையும் கூறும் சமயம்சாராமல் நல்லொழுக்கம் உலகில் நிலைபெறும் (There can be good Character among human beings independent of religion) என்று கூறுதல் போலப் பண்டைத் தமிழ் மக்கள் கூறவில்லை. கடவுளைப்பற்றி யன்றி நல்லொழுக்கம் நிலைபேறு அடையாது என்னும் உண்மையையும் அறத்தின் வழியாயல்லது கடவுளைச் சார முடியாது என்னும் உண்மையையும் அவர்கள் ஐயம் திரிபற நன்கு அறிந்திருந்தார்கள். திருமூலர் திருமந்திரத்தில் "அறமறியாரண்ணல் பாதமறியுந் திறமறியார்" என அறம் இன்னது என்று அறிந்து ஒழுகுகிறவர்கள்தாம் இறைவன் அடியை அடைந்து இன்பம் பெறுவார்கள் என்று கூறுகின்றார். திருநாவுக்கரசு அடிகள் "அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச் செற்றக் குரோதம் நீக்கியுன் திறத்தனா யொழிந்தேன்" என்று திருவாரூர்ப் பதிகத்தில் கூறியருளியதும் அக்கருத்தையே சைவ நெறியிற் கூறப்பட்ட சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு சமய வாழ்க்கை (practical course of religious life) நடைமுறை நிலைகளில் யோகத்துக்குக் கூறப்பட்ட எட்டு உறுப்புகளில் (அங்கங்களில்) அறத்தின் (good character) பாற் பட்ட இயம நியமங்கள்முதல் இரண்டு உறுப்புகளாக அடிப்படையில் வைக்கப்பட்டிருத்தலும் இக்கருத்தை நன்கு விளக்கும்.

5. இனி அறவன் என்ற சொல்லானது அறத்தைச் சொல்கிறவன் என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது. சிவபிரான் சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் கல்லால் நீழலின் கண்ணே அமர்ந்து அற முதலிய நான்கு உறுதிப்பொருள்களையும் சொன்னார் என்ற கருத்தில் கடவுளைப் பண்டைத் தமிழர்கள் அறவன் என்று கூறினார்கள் என்று கொள்ளுதலும் பொருந்தும்.

6. தேவாரங்கள் முதலிய தமிழ் மறைகள் கடவுளை அறவன் எனச் சில இடங்களிற் கூறுகின்றன. அவைகளிற் சில அடியிலே குறிக்கப்பட்டுள்ளன.

1. "அறவனூர் தொழுதுய்யலாம் மையல் கொண்டஞ்சனெஞ்சே"

திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாரூர்த் தேவாரம் ௬-வது பாட்டு.

2. "அறவனெம்பிரா னன்பிலாலந்துறை"

திருநாவுக்கரசு சுவாமிகள் திரு அன்பிலாலந்துறைக் குறுந்தொகை எ-வது பாட்டு.

3. "அறங்காட்டி யந்தணர்க் கன்றால நீழலற
மருளிச்செய்த அரனூர்"

திருநாவுக்கரசு சுவாமிகள் கோயிற்புக்க திருத்தாண்டகம் ௫ வது பாட்டு.

4. "அறவனூராவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே"

சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூப்பதுமில்லை பதிகம் கூ வது பாட்டு.

5. "அறவா வங்கணனே யடியேனையு மஞ்சலென்றருளே"

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கற்குடிப்பதிகம் உ-வதுபாட்டு.

7. அறம் என்ற சொல்லினது கருத்துக்குத் தொடர்புபட்டுள்ள 'நெறி', 'குறி' என்ற சொற்களும் தேவார திருவாசகங்களில் பல இடங்களில் கடவுளைக் குறிக்க வழங்கப்படுகின்றன. அவ்வாறு வழங்கப்படுதல் கடவுள் மக்களது உலக வாழ்க்கைக்குக் குறி (aim) யாயும் அக்குறிக்கு நெறி (path) யாயும் இருக்கின்றான் என்னும் கருத்தைத் தெரிவிக்கின்றது.

---

# திருவள்ளுவர்

[திரு. தி. த. கனகசுந்தரம் பிள்ளை அவர்கள், பீ. ஏ.]

திருவள்ளுவர் தமிழர். இவர் தமிழில் இயற்றிய நூல் திருக்குறள். இத்திருக்குறளைப்பற்றி ஆங்கிலங் கற்ற தமிழர் ஒருவர் பின் வருமாறு கூறுவர்:—

"தமிழ் எனும் மாது உச்சியிற் றரிக்கும் சூடாமணி யெனச் சொல்லக் கூடியதும், தமிழின் பெருமையை எங்கும் பரவச் செய்ததும், சாதிபேதம் மதபேத மின்றி யாரும் எக்காலத்துங் கைக்கொள்ளக் கூடியதும், தமிழர்க்குப் பெருஞ் செல்வ மாயதும் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளே. இந்நூல் இலத்தீன் பாஷையில் ஒருவராலும், பிராஞ்சில் ஒருவராலும், ஜர்மேனிய பாஷையில் ஒருவராலும், ஆங்கிலேய பாஷையில் மூவராலும் மொழி பெயர்க்கப்பட்டுளதாயின், இதன் பெருமையை யானோ எடுத்துரைக்க வல்லேன்! தமிழ் வேதம் என்னும் பெயரும் இதற்குத் தகுந்ததே. இவ்வித நூல் வேறொரு பாஷையிலுமில்லையாயின், இதனால் தமிழுடையும் பெருமை இவ்வளவிற்றென எடுத்துரைக்கற் பாற்றோ! இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையுமே 1330 குறளாற் கூறுவது, வீட்டைப் பற்றி ஏன் கூறவில்லையோ தெரிதலரிது. வள்ளுவர் நான்கையும் பற்றி எழுதியிருப்பார், வீட்டுப் பாகம் இறந்து போயிருக்க வேண்டும் என்பர் சிலர். அறம், பொருள் இன்பம் மூன்றையும் பாடி, வீட்டைப்பற்றிப் பாடுமுன் வள்ளுவர் இறந்திருப்பார் என்பர் சிலர். அநுபவத்தைக் கொண்டு, அறம், பொருள் இன்பம் என்னும் மூன்றையும் பற்றி உறுதியாய்ச் சொல்லியவர், வீட்டைப் பற்றி உறுதியாய்ச் சொல்ல முடியாமையின் எழுதாது விட்டனர் என்பர் சிலர். இந்நூல் சகல சாதிகளிடத்திலும், சகல மதத்தரிடத்திலும் பரம்ப வேண்டும் என்னும் விருப்புடையோராய், சகலர்க்கும் பொதுவான அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும்

சொல்லி, வீடு சகலர்க்கும் பொதுவாகாமையின் கூறாது விட்டனர் என்பர் ஒரு சாரார். அஃதெவ்வாறாயினு மாகுக. அஃது இற்றைக்கு ஆயிர வருடங்கட்கு முன், குறள் போன்ற ஒரு நூல் இயற்றிய தமிழர் மிகவுஞ் சீர்திருந்தி யிருந்தனர் என்பதற்கு ஆன்ற அத்தாட்சியாகும். ஆயின் இவ் வள்ளுவர் எங்கிருந்தனரோ? எம்மதத்தரோ? எக்காலத்திருந்தனரோ? இவை யாருமறியா மறைபொருளா யிருக்கின்றன. மயிலாப்பூரில் இருந்தனர் என்றும், நெய்தற் றொழில் செய்தன ரென்றும் பெரும்பான்மையும் சொல்வர். சைவர்கள் இவரைச் சைவரென்பர். வைணவர் வைணவரென்பர். போப் (Dr. Pope) துரை கிறிஸ்தவரென்பர் போலும். சமணர் இவரைச் சமணரென்றே கூறுவர்."

மேலே கூறியபடி, தமிழிலக்கியங்களுள் மிகச் சிறந்தது மாத்திரமன்று மிகப் பழையதும் திருக்குறளே. சங்கச் செய்யுள் என்று சொல்லப்படும் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு (முப்பால் என்னும் குறள் ஒழிய) ஆகிய இவை எல்லாம் குறளுக்குப் பிற்பட்டவையாம். எட்டுத் தொகை முதலியவற்றுட் கோக்கப்பட்டுள்ள பாடல்கள் சில குறளுக்கு முந்தியவையாயிருக்கலாம் ஆனல்; அவை இவை யென்று இப்போது நிச்சயிப்பது கூடாத காரியம். எட்டுத் தொகைகள் யாவும் அல்லது அவற்றுட் பல, தொகுக்கப்பட்டது குறளியற்றி வெகு காலத்துக்குப்பின். திருவள்ளுவரோடு ஒரு காலத்தவராக எண்ணப்படும் சீத்தலைச் சாத்தனார், அவ்வையார், இடைக்காடனார் முதலியோர் பாடல்கள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் தொகை நூல்களில் காணப்படுவதால் இது தெளிவாகும். மணிமேகலை பாடினவர் சீத்தலைச்சாத்தனாராயின், இந்தத் தொகை நூல்கள் தொகுக்கப்பட்டது மணிமேகலையும் சிலப்பதிகாரமும் தோன்றிய பின்பே யாகும்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்னும் திருக்குறள் சிலப்பதிகாரத்தில் கட்டுரை காதையில்

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வம் தொழுந்தகைமை திண்ணமாய்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து"

என்னும் முடிவுரை வெண்பாவிலும், மணிமேகலையில் சிறை செய்காதையில்

"தெய்வந்தொழா அள்கொழு நற்றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை கேளாய்"

என்னும் அடிகளிலும் எடுத்தாளப்பட்டிருத்தலால், இவ்விரண்டு காவியங்களும் தோற்றுதற்குப் பல நூறாண்டுகளுக்கு முன் குறள் இயற்றப்பட்டதாதல் வேண்டும். குறளின் பெருமையை யாவருமுணர்ந்து, அது பாடிய புலவரைப் "பொய்யில் புலவன்" என்று மேம்படுத்துக்கூறுவதற்கு வெகு காலம் செல்ல வேண்டுமென்பது திண்ணம். இதுகாறும் கூறியவாற்றால் குறளுக்கு வெகு காலத்துக்குப் பிற்பட்டன சிலப்பதிகாரமும் மணிமேகலையும் என்பதும், இவ்விரண்டும் இயற்றப்பட்டதன் பின்பே நற்றிணை, குறுந்தொகை முதலிய தொகைநூல்கள் தொகுக்கப்பட்டன வென்பதும் தெளிவாகின்றன.

இப்போதுள்ள தமிழ் இலக்கியங்களுள் திருக்குறள் முற்பட்டதென்பது சாலும்; ஆயினும், அதற்கு முற்பட்ட தமிழ் நூல் வேறொன்று மில்லையோ என்னில், கூறுதும். தொல்காப்பிய மென்னுந் தமிழிலுள்ள பேரிலக்கணம் திருக்குறளுக்கு முற்பட்டது. ஆராயுமிடத்துத் தொல்காப்பியர் கூறிய விதியின்படியே திருவள்ளுவர் தமது குறளை இயற்றி உள்ளாரென்பது விளங்கும். அதுவுமன்றித் தொல்காப்பியருடைய சொற்களையும் பொருளையும் திருவள்ளுவர் தமது குறளில் எடுத்தாண்டிருப்பதும் புலப்படும்.

பிற்கூறிய விஷயம் யாவருக்கும் எளிதில் விளங்குமாதலால் அதனை முதலிற் கூறுதும். தொல்காப்பியர் செய்யுளியலில் மந்திரச் செய்யுள் இத்தன்மைத்தென உணர்த்துவார்,

"நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப";

என்றார். இதனையே சிறிது மாற்றித் திருவள்ளுவர் நீத்தார் பெருமை கூறுமிடத்து

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்"

என்றார். இதற்கு உரை எழுதிய பரிமேலழகரும், "நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது பெருமையை நிலவுலகத்தின் கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும்" என்று கூறி மந்திர மென்பது தொல்காப்பியர் சொன்னபடி நிறைமொழி மாந்தராணை என்பதனை விளக்கினர். தொல்காப்பியரது சொற்களைத் தமது உரைநடையி லமைத்துக் கூறினமையால் பரிமேலழகருக்கும் கருத்துத் திருவள்ளுவ ரிதனைத் தொல்காப்பியத்திலிருந்தெடுத்தாரென்பதே யாகும்.

இனி, தொல்காப்பியர் மேற்கூறிய செய்யுளியலில் தமிழ்ப்பா ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலியென நான்காகு மென்று கூறி, பின்னர் அவற்றால் இன்னபொருள் உணர்த்தப் படுமென்பார்

"அந்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப"

என்று அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருளுமே உணர்த்தப்படு மென்றார். இதனால், தொல்காப்பியத்தின்படி, நூல்களால் உணர்த்தப்படுவன அறமும் பொருளும் இன்பமு மென்றாயிற்று. இதற்கிணங்கவே திருவள்ளுவரும் தமது குற ளால் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருளை யுமே கூறினர். இதனை நச்சினார்க்கினியர் தமது எழுத்ததி காரத்துச் சிறப்புப் பாயிர வுரையில் எடுத்து விளக்கியுளர். அது வருமாறு:—

"வீடு கூறாரோவெனின், அகத்தியனாரும் தொல்காப்பிய னாரும் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறுதலன்றி வீட்டின் தன்மை இலக்கணத்தாற் கூறா ரென்றுணர்க. அஃது 'அந்நிலை மருங் கினற முதலாகிய மும்முதற் பொருட்கு முரிய வென்ப' என் பதனான் உணர்க. இக்கருத்தானே வள்ளுவரும் முப்பாலாகக்

கூறி மெய்யுணர்தலான் வீடு பேற்றிற்கு நிமித்தம் கூறினர்'' இதனால் வள்ளுவர் தமது திருக்குறளில் வீடு கூறாததற்குக் காரணம் இது வென்பது தெள்ளிதிற் பெறப்படுதல் காண்க.

இனித் திருவள்ளுவர் என்னும் பெயரைப் பற்றிச் சிறிதாராய்வாம். இது திருவும் வள்ளுவருமாகிய இரண்டு மொழியாலாயது; அடையடுத்த பெயரெனப்படும். திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்க மென்பர் பேராசிரியர். அஃது இங்குப் பொருந்தாது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் என்பவற்றில் போலத் திரு வென்பது இங்கே பெருமை, பெருமிதம், மகிமை ஏன்பவற்றைக் குறிக்கும். ஆகவே திருவள்ளுவர் என்பது பெருமையுடைய வள்ளுவர் என்று பொருள்படும். வள்ளுவர் என்பதை இயற் பெயராகக் கொள்ளாது இக்காலத்துப் பெரும்பாலார் காரணப் பெயராகக் கொள்வர். அவருள் ஒரு சாரார் வள்ளுவரென்பது வண்மையுடையவர் என்னும் பொருளது என்றும் மற்றொரு சாரார் சாதிப் பெயரென்றும் கூறுவர். இவ்விரு கூற்றுள் ஒன்றாவது பொருந்துவதாகக் காணவில்லை. வள்ளுவன் என்பது வண்மையுடையவன் என்னும் பொருளில் எங்கும் வந்திலது; சாதிப் பெயராகவும் வரவில்லை. வள்ளுவன் என்பது பிங்கலத்திலும் திவாகரத்திலும்,

வள்ளுவன் சாக்கை யெனும் பெயர் மன்னர்க்
குள்படு கருமத்தலைவற் கொன்றும்''

என அரசனுக்குட்பட்ட கருமத்தலைவன் பெயராய் வந்துளது. சூடாமணி நிகண்டில்

''வருநிமித்திகன் பேர் சாக்கை வள்ளுவ
னென்று மாகும்''

என நிமித்திகன் பெயராய் வந்துளது. நிமித்திகன் என்னும் பதத்திற்கு ''வருங் காரியம் சொல்வோன்'' என்று பொருள் கூறுவர். அது தமிழ் வழக்குப் போலும். நிமித்திகன் என்னும் பதம் நிமித்தம் என்னும்டியாற் பிறந்ததாயினும் வடமொழியன்று. அஃதாவது நிமித்திகன் என்னும் பதம் வடமொழியியில்லை. நிமித்தக்ஞன், என்பது வடமொழியில் வருங் காரியஞ்

சொல்வோன் என்று பொருள்படும். காரணவன் என்பது போல நிமித்திகன் என்பதும் தென்மொழியாளரால் புதிதாக அமைத்துக் கொள்ளப்பட்ட பதம். காரணவன் என்பது போலவே இதுவும் கருமத்தலைவன் என்று பொருள்படும். மன்னர்க்குட்பட்ட கருமத் தலைவனுயின், வள்ளுவன் இழி குலத்தவனுயிரான். வள்ளுவரை இழிகுலத்தார் என்போர் அவர் யானைமேல் முரசு கடிப்பிட்டு அரசனாணை சாற்றுவார் என்பர். கம்பராமாயணம் முதலிய நூல்களில் முரசறைவோனை வள்ளுவன் என்று கூறியிருப்பினும், மணிமேகலை முதலிய பழைய காவியங்களில் அவ்வாறு கூறப்படவில்லை. ஆதலால் வள்ளுவனென்பது தொன்று தொட்டு முரசறைவோன் பெயராயிருந்ததென்று கொள்ளற் கிடமில்லை. வள்ளுவரை இழி குலத்தார் என்று சொல்வதற் காதாரமாயுள்ளது திருவள்ளுவ மாலையில் மாமூலனுர் பாட்டாகக் காணப்படும்

“ அறம்பொரு ளின்பம் வீடென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவனென் பானோர்பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்”

என்னும் செய்யுள். இதனைப் பின்பற்றிச் சிவஞான முனிவரும் தமது சோமேசர் முதுமொழி வெண்பாவில்,

“மெய்த்த திருவள்ளுவனுர் வென்றுயர்ந்தார் கல்விநலம்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா—உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்ரு ரனைத்திலர் பாடு.

எனத் திருவள்ளுவரை இழிகுலத்தாரென்பர். திருவள்ளுவ மாலை இதற்கோராதாரமாகக் கொள்ளக்கூடிய நூலன்ருயின் அதனையே பின்பற்றிய இம்முதுமொழி வெண்பாவின் கூற்றும் கொள்ளக்கூடிய தன்ருகும். திருவள்ளுவ மாலை செய்தது குறள் அரங்கேற்றிய காலத்தென்ருவது, அதில் நாமகள், இறையனுர் முதலியவர்கள் பாடியனவாகக் காணப்படும் செய்யுள்கள், மெய்ம்மையாக அவர்களாற் பாடப்பட்டன வென்ருவது கொள்ளற் கிடமின்மையால், மேற்கூறிய மாமூலனுர் பாட்

டென்பது வள்ளுவரை இழிகுலத்தானென்பதற்குத் தக்க ஆதாரமாகாது. திருவள்ளுவமாலை செய்தது குறள் அரங்கேற்றிய காலத் தன்றென்பதற்குக் காரணம் என்னை என்பீராயின், அசரீரியும், நாமகள், இறையனார் முதலிய தெய்வங்களும் பாட்டுப் பாடுவது அநுபவ விரோதமும் அசம்பாவிதமுமாதலே யாம். மற்றையோர்களாற் பாடப்பட்டனவாகக் காணப்படும் பாட்டுக்களுள் பெரும்பாலன மெய்யாக அவர்களாற் பாடப் பட்டனவல்ல. எங்ஙனமெனின், ஒரு நூலுக்குப் பாயிரஞ் சொல்லவோ, அன்றி அதனை எடுத்துப் புகழவோ புக்கவர் அந் நூல் முழுவதையும் பற்றிப் பேசுவரேயன்றி அதன் ஒரு பாகத்தை மாத்திரம்பற்றிப் பேசார். திருவள்ளுவமாலையிலோ அறத்துப் பாலைப்பற்றி,

“ பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையாவாய்ந் துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து”

என்று எறிச்சலூர் மலாடனாரும், பொருட்பாலைப்பற்றி

“ அரசிய லவையைந் தமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ்குடி பதின்மூன்
றென்பொரு ளேழா மிவை”

என்று போக்கியாரும், காமத்துப் பாலைப்பற்றி

“ ஆண்பா லேழா றிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு”

என்று மோசிகீரனாரும் கூறினதாக வருகின்றது. இம்மூன்று பாடலும் குறளிலுள்ள ஒவ்வோரியலின் தொகையையும் அதிகாரத்தின் தொகையையும் கூறுகின்றன வன்றிக் குறளின் சிறப்பை அல்லது அதன் அருமை பெருமைகளை எடுத்துரைக்க வில்லை; அன்றிச் செய்யுளழகு வாய்ந்தன வாயுமில்லை. இவை களை இயற்றுவதற்கு மூன்று சங்கப்புலவர்கள் வேண்டியதில்லை;

காரிகை கற்றுக் கவிபாடும் ஒருவர் போதும். அங்ஙனமே இவை மூன்றும் குறளின் இயலும் அதிகாரமும் இத்தனை யென்றும் கணக்கிட விரும்பிய ஒருவராலேயே இயற்றப்பட்டனவாதல் வேண்டும்.

திருவள்ளுவமாலை குறள் அரங்கேற்றப்பட்ட காலத்துச் செய்யப்படவில்லை என்பதற்கு மற்றொரு நியாயமும் கூறுதும். அம்மாலையில் உக்கிரப் பெருவழுதியார் பாடினதாக வரும் செய்யுளில் "நான் மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த— நூல்" என்றும், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பெயர் கொண்ட செய்யுளில் "ஐயாறு நூறு மதிகார மூன்றுமா, மெய்யாய வேதப்பொருள் விளங்கப் பொய்யாது, தந்தானுலகிற்குத்தான் வள்ளுவனாகி, அந்தாமரை மேலயன்" என்றும் வள்ளுவனாரைப் பிரமதேவனி னவதாரமாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு வள்ளுவரைப் பிரமதேவனி னவதாரமாகக் கூற வந்தது அவர் உயிரோடிருந்தபோதன்று. உயிரோடிருக்கும்போதே ஒருவரைக் கடவுளின் அவதாரமாகக் கொண்டாடுவது எங்குமில்லை. ஒருவர் இறந்தபின் பல வருடங்கள் சென்று காலம் நீடிக்க நீடிக்கத் தான் அவருடைய பெருமை வளர்ச்சியுற்றுத் தெய்வத்தன்மை யடையும். அப்போதுதான் அவர் கடவுளின் அவதாரமாகக் கருதப்படுவார். அங்ஙனமே வள்ளுவரின் அறிவின் பெருமையைக் கண்டு அவரை ஒரு கடவுளின் அவதாரமாகக் கொண்டாட வந்தது அவர் குறளியற்றிப் பல வருடங்கள் சென்ற பின்பேயாம். அப்படிச் சிறிது காலம் சென்று வள்ளுவர் பிரமதேவனுடைய அவதாரமென்ற கொள்கை வேரூன்றியதன் பின்னரே இந்தப் பாட்டுக்கள் பாடப்பட்டிருத்தல் வேண்டும். இங்ஙனம் இப்பாட்டுக்கள் பாடப்பட்டது குறள் இயற்றி வெகு காலத்துக்குப் பின்பாதலால், அவற்றை யடக்கியுள்ள திருவள்ளுவமாலை குறளரங்கேற்றப்பட்ட காலத்து இயற்றப்பட்டதாகாது.

இனி, இறையனார் களவியலுரையில் கடைச்சங்கப் புலவர்

எண்மர் பெயர் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வெண்மருள் திருவள்ளுவ மாலையில் மூவர் பெயர் மாத்திரம் காணப்படுகின்றன; ஐவர் பெயரில்லை. அன்றியும் சிலப்பதிகாரத்தில் மகாமகோபாத்தியாயர் சாமிநாத ஐயரவர்களால் எடுத்துக் காட்டப்பட்ட பழைய அகவலொன்று கடைச் சங்கப் புலவரில் இருபத்தெழுவர் பெயர் கூறுகின்றது. அவற்றில் பதினேழு பெயர் திருவள்ளுவ மாலையிலில்லை. இதனால் திருவள்ளுவ மாலை பாடினவர் கடைச்சங்கப் புலவர்கள் என்று சொல்வதற் கிடமின்றாகின்றது.

மேற் கூறியவற்றால் திருவள்ளுவமாலை கடைச் சங்க காலத்து நூலன்றென்பதும் அதிலுள்ள பாட்டொன்றேனும் அங்கே கூறப்பட்ட புலவராலேயே இயற்றப்பட்ட தென்பதற்குத் தக்க ஆதாரம் இல்லை என்பதும் நன்கு போதரும். ஆயின் திருவள்ளுவமாலை எக்காலத்து யாரால் இயற்றப்பட்டதெனின், காலந்தோறும் திருக்குறளைப்பற்றிப் பல பாட்டுக்கள் பலபுலவராலியற்றப்பட்டனவாக, பிற்காலத்து வந்த புலவரொருவர் அவற்றையெல்லாம், அன்றேல், அவற்றுட் சிறந்தனவற்றை* மாத்திரம், ஒருங்கு சேர்த்து ஒழுங்குபடுத்தி ஒரு நூலாக்கியிருத்தல் வேண்டும். அவர் தாமும் சில பாட்டுக்கள் பாடிச் சேர்த்திருக்கலாம். அல்லது நூல் முற்றையும் ஒரு புலவரேயே செய்து மிருக்கலாம். வள்ளுவ மாலையில் வரும் பாட்டுக்கள் ஏறக்குறைய ஒரே விதமான நேரிசை வெண்பாவாக விருத்தலும், அசரீரி சொன்னதாக வரும் பாட்டு அசரீரியே நேரே சொன்னதாக இல்லாமல்,

"திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கவோ வென்றதோர் சொல்."

என அசரீரி சொன்னதாக மற்றொருவரால் பாடப்பட்டிருத்தலும் இந்தக் கொள்கைக்குத் தகுந்த துணையாகும்.

---

* திருவள்ளுவரைப் புகழ்ந்து பாடிய பாட்டுக்கள் திருவள்ளுவ மாலையில் வாராதன சில செந்தமிழ் முதற்றொகுதியில் வந்துள 54-ம், 294-ம் பக்கம் பார்க்க.

இன்னும் இந்தப் பாட்டு மதுரையில் தெய்வத்தன்மை பொருந்திய சங்கப் பலகை ஒன்றிருந்ததென்பதைக் குறித்தலி னாலும், அந்தப் பலகையில் திருவள்ளுவரோ டொக்க விருத் தற்கு உருத்திரசன்மரே ஏற்றவரென்பதனால், குறளரங்கேற் றிய காலத்தில் சங்கத்துப்புலவர் நாற்பத்தெண்மரும் திருவள் ளுவரோ டொக்க விருக்கத் தகுதியற்றவராய்ப் பொற்றாமரை வாவியுள் வீழ்ந்து முழுகினரென்னுங் கதைக்குத் தோற்று மிடமாயிருத்தலினாலும் இது குறள் தோன்றி வெகு காலத்திற் குப் பின் இயற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்பது தேற்றம். சங்கப் பலகையிலேற்றிய இந்தக்கதை கட்டுக்கதை. இது போன்றதொரு கதை சடகோபரியற்றிய திருவாய் மொழியைப் பற்றியும் வழங்குகின்றது.

இனி வள்ளுவர் இழி குலத்தினரல்லர் என்பதற்கு மற்று மொரு காரணம் கூறுதும். குறள் படிப்பவர் யாவருக்கும் அதனை இயற்றிய ஆசிரியர் அக்காலத்திருந்த தமிழ் நூல்கள் மாத்திரமன்றிச் சமஸ்கிருத நூலினும் வல்லராதல் நன்கு விளங் கும். குறளுக்கு உரை எழுதிய ஆசிரியர் பலரும் இக்கருத் தினராதல் அவ்வுரைகளை வாசிப்பவர் அனைவரும் கண்டு கொள்ளலாம். அவ்வாசிரியர்களுள் பரிமேலழகர் கூறுவன சில வற்றை இங்கு எடுத்துக் காட்டுவாம்.

424-ம் குறளுரையில்

" இவைபற்றியல்லது பகைவர் அற்றந்தாராமையின் இவையே பகையாவன வென்னும் வடநூலார் மதம்பற்றிக் குற்றமே அற்றந்தரூஉம் பகை என்றும் இவற்றதின்மையே குணங்களதுண்மையாகக் கொண்டென்பார் பொருளாக என் றும் கூறினர்" எனவும்,

"அறம் பொருளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந் தேறப்படும்."

என்னும் 501 ம் குறளுரையில் அறவுபதை முதலிய இன்ன வென்று விளக்கிய பின்

"இவ்வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவரோதிய

தறியாது பிறரெல்லாம் இதனை உயிரெச்சம் எனப் பாடந் திரித்துத் தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்" எனவும்,

(இவ்வுபதைகள் சாணக்கிய ரியற்றிய அர்த்த சாஸ்திரத் திற் கூறப்பட்டுள்ளன. புத்தகம், 1. அதிகாரம், 9.)

662-ம் குறளுரையில்

"தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மையும் உடன் கூறினார்" எனவும்,

(இங்கே குறித்த நீதி நூல்கள் காமந்தகம் சாணக்கியம் முதலியன).

காமத்துப்பால் முகவுரையில்

"இது (காமவின்பம்) புணர்ச்சி பிரிவென இருவகைப் படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோவெனின், இவர் (திருவள்ளுவர்) பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பமென வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான், அவ்வாறே அவற்றைப் பிரிவின் கண் அடக்கினாரென்க" எனவும்

1330-ம் குறளுரையில்

ஈண்டுப் பிரிவினை வடநூன் மதம் பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப்புலவியென நால்வகைத் தாக்கிக் கூறினார்." எனவும் கூறுவர் பரிமேலழகர்.

இவ்வாறு அவர் கூறுவன இன்னும் பலவுள. இவற்றால் திருவள்ளுவர் வடமொழியிலுள்ள ஸ்மிருதிகளும், அர்த்த சாஸ்திரங்களும்; காம சாஸ்திரங்களும் நன்கு கற்றவரென்பது விளங்குகின்றது. திருவள்ளுவர் குலத்தாற் பறையனாயிருந்தால் வடமொழியிலுள்ள ஸ்மிருதிகளும், அர்த்த சாஸ்திரங்களும் கற்றல் முடியாது. சாஸ்திரங்களைக் கற்றலென், வடமொழிப் பயிற்சி அடைவதே கூடாதென்னலாம். ஸ்மிருதிகளும் அர்த்த சாஸ்திரங்களும் கற்பவர் அரசரும் அரசர்க்கு அமைச்சுத் தொழில் பூணும் பிராமணர் முதலாயினாருமே யாதலின், திருவள்ளுவர் நல்ல உயர் குலத்தினராதல் வேண்டும்.

"தேவர் குறளும் திருநான் மறை முடிவும்" என்ற செய்யுளிலும், பிறவிடத்திலும், திருவள்ளுவரைத் தேவர் என்று கூறுவதும், நாயனார் என்று கூறுவதும், அவர் உயர் குலத்தாராதலைக் காட்டும். நேமிநாத விருத்தி திருவள்ளுவரைத் திருவள்ளுவ தேவரென்னும் (நேமி. சொல் 5). தேவர் என்பது பெரும்பான்மையும் அரச குலத்தினரையே குறித்து வருகின்றது. திருத்தக்க தேவர், திரிபுவன தேவர், ராஜ ராஜ தேவர் என்பன காண்க.

இனி வள்ளுவர் என்னும் பெயர் சாதிப்பெயரும் காரணப் பெயருமன்றாயின், வேறு யாது என்றால், அஃது இயற்பெயராதல் வேண்டும். திருவள்ளுவ மாலை முதலிய நூல்களில் வள்ளுவரென்னும் பெயரே பயின்று வருதல், அஃது இயற்பெயராதலைக் குறிக்கும். தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில் வரும்

> "சிறப்பினாகிய பெயர் நிலைக்கிளவிக்கும்
> இயற் பெயர்க்கிளவி முற்படக் கிளவார்"

என்னும் சூத்திரவுரையில், வினைக்கொருங்கியலுங் காலைச் சிறப்புப் பெயருக்குப் பின்பே இயற்பெயர் வருமென்பதற்குதாரணமாகச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் "தெய்வப் புலவன் திருவள்ளுவன்" என்பதைக் காட்டியுளர். இதனால் அவர்களிருவரும் திருவள்ளுவனென்பதை இயற்பெயராகக் கொண்டமை தேற்றம்.

வள்ளுவன் என்னும் பெயர் திருக்குறளாசிரியர்க்கன்றி வேறு பிறர்க்கும் இயற்பெயராய் வந்துளதோவெனின், பலர்க்கு வந்துளது. புறநானூற்றில் நாஞ்சில் வள்ளுவன் என்னும் பெயர் வந்துளது. இங்கு நாஞ்சில் என்பது ஒரு மலையின் பெயர். (இவ்வாறு கூறுவர் புறநானூற்றுரையாசிரியர். நாஞ்சில் என்பது ஒரு நாட்டின் பெயர்போலும். நாஞ்சில் நாடென்றொரு நாடு இப்போதும் மலையாளத்துளது.) வள்ளுவனென்பதும் அம்மலைக்குத் தலைவன் பெயர். இவனை ஒரு சிறைப்பெரியனார், மருதன் இளநாகனார், கருவூர்க் கதப்பிள்ளை முதலி

யோர் பாடியுளர். தாமிர சாசனங்களிலும் வள்ளுவன் என்னும் பெயர் வந்துளது. ஸ்ரீவள்ளுவன் கோதை என்னும் சேர ராசனுல் வழங்கப்பட்ட வட்டெழுத்துத் தாமிர சாசனங்கள் சிலவுள. (See page 127 of Tamil Studies by Mr. Srinivasa Aiyangar) இப்போதும் மலையாளத்தில் வள்ளுவ நாடொன்றொரு நாடுளது. இது வள்ளுவனுடைய நாடென்று பொருள்படும். இங்கே வள்ளுவனென்பது இயற் பெயரே. இவற்றால் வள்ளுவனென்னும் பெயர் மலையாள தேசத்தில் இயற்பெயராய் வழங்கி வந்தது செவ்வனே நாட்டப்படும். இவை திருவள்ளுவரென்னும் பெயரை இயற்பெயராகக் கொள்வதற்குப் போதிய சான்றாகும்.

மலையாள தேசத்தைப்பற்றிப் பேசவே, திருவள்ளுவர் பிறந்து வளர்ந்த நாடு யாதென்னும் கேள்வி ஞாபகத்துக்கு வருகின்றது. திருவள்ளுவர் பிறந்து வளர்ந்தது மயிலாப்பூரிலென்பர் பலர். அவர் கூற்றுற்குக் கபிலரகவலைத் தவிர வேறு ஆதாரம் உளதாகக் காணவில்லை. கபிலரகவல் ஒரு கட்டு நூல்; பிற்காலத்துச் செய்யப்பட்டது. கடைச் சங்கத்தில் விளங்கிய கபிலர் பிறந்தது வாதவூர்; கபிலரகவலிற் சொல்லுமாறு திருவாரூரன்று. திருவள்ளுவ மாலையில்,

"உப்பக்க நோக்கி உபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக்கச் சென்ப—இப்பக்கம்
மாதாநுபங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு."

என வரும் பாட்டுத் திருவள்ளுவரை மதுரையைச் சார்ந்தவராகக் கூறும். வள்ளுவர் என்னும் பெயர் வழக்கு இவரைச் சேரநாட்டைச் சேர்ந்தவராகக் காட்டும்போலும். பண்டைக் காலத்தில் தமிழ் மிகுதியும் வளர்ச்சி யுடைந்தது சேரநாட்டிலாதலும், இப்போது நமக்குக் கிடைத்துள்ள பழந்தமிழ் நூல்கள் பல சேரநாட்டைச் சார்ந்தவையாதலும், வள்ளுவரைச் சேரநாட்டாரென்று கொள்ளுவதற்கு ஒருவாறு துணையாகுமன்றே?

---

# இளஞ்சேய்க் கொல்லி

## சிறுமலை நாட்டில் நிகழ்ந்தவை.

[திருக் கபசம் எழுதியது]

சிறுமலை நாட்டிற்கு வேந்தனாகிய வரம்பன் என்பவன் ஒரு நாட் காலையில் வேட்டையாடச் சென்று, விலங்குகளைப் பின்பற்றி யோடித்திரிந்து களைத்து, வேட்டையாடத் தன்னுடன் வந்தவர்களோடு காட்டிலுள்ள சிறு வெளி ஒன்றில் இளைப் பாறிக் கொண்டிருக்கும் போது, நீண்ட பிரயாணஞ் செய்து இளைத்துப்போனவனும், அழுக்குப் படிந்த ஆடைகளை அணிந்தவனுமாகிய ஒருவன் குதிரையின் மேலமர்ந்தவனாய் அங்குத் தோன்றினான். அவனது உடை அழுக்குப் படிந்திருந்ததோடு, கிழிந்து கந்தல் கந்தலாய்த் தொங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய இடையில் வாளுறை யொன்று தொங்கிக் கொண்டிருந்தது; அஃது ஒடிந்து போயிருந்தது. அதில் வாளுமில்லை; அவனேறியிருந்த கரிய குதிரை வேர்வை நிறைந்து மார்பில் நுரையுடன் நின்று துடித்தது. இங்ஙனம் வந்தவனுடைய முகத்திற் பெருந்துன்பங் குடிகொண்டிருந்ததாயினும், அவனுடைய உருவமும் பார்வையும் உயர்குடிப் பிறப்பினனென்று அவனை யறிவித்தன. இவனை உற்று நோக்கிய சிறுமலைநாட்டு வேந்தன், பொறுக்கவொண்ணாத ஒரு வருத்தத்தாற் குதிரைமேலேறிய இம்மகன் தனது நாட்டையும் வீட்டையும் விட்டோடி வந்திருக்க வேண்டுமென்று நினைத்தான். அரசனின் வேட்டை நாய்கள் புதிதாய் வந்தவனைக் கண்டு வெகுண்டெழுந்து பாய, அரசனோடிருந்தவர்கள் நாய்களை யதட்டி அடக்கி, மாவின்மேலிருந்தோனைக் கூவியழைத்து, "இந்தக் காட்டிற்குள் நுழைந்த நீ யார்? எதற்காக நீ இங்கு வந்தாய்?" என்று இத்தகைய பல கேள்விகளைக் கேட்டார்கள். உடனே அவன் குதிரையை விட்டிறங்கி, "என்னுடைய வரலாற்றைச் சொல்லி முடிக்குமளவும் எனதுயிர் நிற்குமோ இல்லையோ? அறியேன். உங்களரசன் முன் என்னைக் கொண்டுபோய் விடுங்கள்" என்று விடையிறுத்-

தான். இவனுடைய பரிதாபமான உள நிலைமையையுங் களைப்பையும் மன்னன் கண்டு, "அன்பனே, நீ உணவருந்தி இளைப்பாறியபின், உன்னுடைய வரலாற்றை எனக்குச் சொல்லலாம். இப்பொழுது நீ அதைச் சொல்லவேண்டியதில்லை. உனது பெரிய வருத்தத்தையுந் திகைப்பையும் பார்த்து என் மனமிரங்குகின்றது" என்று உருக்கத்துடன் கூறி, அவனை உணவருந்த அழைத்தான். வந்தவனும் இதற்குடன்பட்டு உணவருந்துவதை அரசன் கூர்ந்து பார்த்து, "இவனுடைய வரலாறு எத்தன்மையதாயிருக்குமோ? என்று கருதிக் கொண்டிருந்தான். ஒருவாறு தன் பசியைத்தீர்த்துக் கொண்ட பின், புதிதாய் வந்தவன் பின்வருமாறு பேசலானான் :—

"எனதுயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு நான் எனது நாட்டையு நகரையும் விட்டோடி வந்தேன். ஆனால் இப்பொழுதிந்த உயிரை வைத்திருக்க வேண்டுமென்ற விருப்பஞ் சற்று மெனக்கில்லை. இப்பொழுதே எனதுயிரை யானிழந்திட நேரிடுமாயின், அதற்காக ஒரு சிறிதும் நான் வருந்தேன். நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். நேற்றுவரையில் யான் எனது தந்தையின் தலைநகராகிய திருவுறை நகரத்தில் யாதொரு கவலையுமின்றி வாழ்ந்து வந்தேன். இளஞ்சேய் என்ற பெயருடையவனும், என்னிடத்தில் மிக்க நேயமுடையவனுமாகிய தம்பியொருவன் எனக்கிருந்தான். நாங்களிருவருஞ் சிறுபிள்ளைகளாக இருந்தகாலத்தில் ஒன்று கூடி விளையாடியிருந்தோம். பிள்ளைப்பருவ நீங்கி வாலிபப்பிராயம் வந்தபோது இருவரு மொன்றாக வெளிநாடுகளுக்குச் சென்று, அரிய வீரச்செயல்கள் நிகழ்த்திப் புகழ்பெற வேண்டு மென்றொரு முடிவு நாங்கள் செய்து கொண்டோம். ஆனால், இனி என் தம்பியாகிய இளஞ்சேயின் முகத்தை நான் பார்க்கப் போவதில்லை; அவன் பெயர் மறைந்து போகும். எல்லோரும் என்பெயரை நிந்தித்துரைப்பார்கள்; நானொரு பழிகாரனானேன்.

"நடந்ததைச் சொல்லுகிறேன் கேளுங்கள். அடுத்தடுத்து மூன்று நாட்களாய் நானொரு கொடிய சொப்பனங் கண்டேன். சொப்பனத்தில், உயர்ந்து வளர்ந்ததும் சாம்பல் நிறமுள்ளது

மான ஒருருவம் தூக்கத்தினின்றும் என்னைத் தட்டி எழுப்பி, எனது தம்பி இளஞ்சேய் கண்வளர்ந்த அறைக்குள்ளே கூட்டிக் கொண்டு போயிற்று. அங்கே இவ்வுருவம் சிறிய ஒரு அம்பை என் கையிற் கொடுத்தது. இவ்வம்பில் வெள்ளிப் பூண்களிருந்தன; அம்பினிற்கு, ஒரு பகுதி சிகப்பும் மற்றொரு பகுதி பச்சையுமாயிருந்தது. இந்த வாளி என் கையில் வந்தவுடன் அதை யார்மீதாயினுஞ் செலுத்தவேண்டுமென்ற ஒருணர்ச்சி எனக்குண்டாயிற்று, நானெவ்வளவு முயன்று பார்த்தும் அவ்வுணர்ச்சியை என்னை விட்டகற்ற முடியவில்லை. இறுதியில் நானொரு உன்மத்தன்போற் கையிலிருந்த அம்பை எனது தம்பி இளஞ்சேயின்மேற் போகவிட்டேன்.

"இச் சொப்பனத்தினால் யான் கலக்கமுற்று நித்திரை செய்கையில், மற்றொரு கனவு கண்டேன். ஒரு மலைச்சாரலில் நான் அலைந்து திரிந்து, கடற்கரை யோரத்திற் கட்டப்பட்ட பெரியதொரு நகரத்தை நானடைந்ததாகக் கனாக் கண்டேன். கடற்கரை மணலில் மக்கள் பெருந் திரளாகக் கூடி இறந்து போன தங்களரசனுக்குச் செய்யவேண்டிய கிரியைகளை நடத்தினார்கள். இறந்துபோன அரசனது பெயரை அவர்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டபோது அது யான் கேட்டிராத ஒருபுதிய பெயராய்த் தோன்றிற்று. ஆனால், துஞ்சிய மன்னனது முகத்தை யான் பார்த்தபோது, அஃது என்னுடைய முகமே என்று கண்டேன்.

"ஒருமுறையன்று, இருமுறையன்று, மும்முறை இக்கனவையே நான் கண்டதால், தாங்கொணாத பெரும் பாரம் என் மனத்தை வந்தழுத்திற்று. என் மனக் கவலையை என் தம்பிக்குக் கூறி ஆறுதல் பெற வழியில்லை. சொப்பனத்தை யவனுக்குக் கூறுவதாற் பயனொன்றுமில்லை. அவனுக்கு விரோதமாக என் மனத்திலுள்ள சூழ்ச்சியைச் சொப்பனமாக நானவனுக்குக் கூற நினைத்தேனென்று, அவனென்மீது ஐயமுறுவானென்று நானஞ்சினேன். என்மீது அவனுக்கெவ்வகையான சந்தேகமுமுண்டாகக்கூடாதென்று நான் உறுதி செய்து கொண்டேன். ஆயினும், நான் கண்ட கனவை யாருக்காயி

னுஞ் சொல்லி, அதனு லென்ன விளேயுமென்று ஆராயாமற் சும்மாவிருக்க முடியவில்லே.

"எனக்கும் என் தம்பிக்கும் இளமையிற் கல்வி பயிற்றுவித்த பெரியவரொருவர் நகரத்திற்கு வெளியே தனியே ஓரிடத்தில் வசித்து வந்தார். அவரிடம் இக்கனவைக் கூறி, அவர் சொல்வதன்படி நடந்து கொள்ளத் தீர்மானித்தேன். மேலே நவின்ற சொப்பனத்தை மூன்ரும் முறை கண்டபின், அதிகாலேயிலெழுந்து பெரியவரிடம்போகப் புறப்பட்டேன். அரண்மனேயின் முற்பகுதியைக் கடந்து நான் வெளியே செல்லுங்கால், அங்கு நின்ற கம்பமொன்றில், சொப்பனத்தில் நான் கண்ட அம்பு வைக்கப்பட்டிருந்ததை நான் பார்த்தேன். இதைக் கண்டு நான் வியப்புற்று நின்றேன். எனது உளத்தை வருத்திய சொப்பனத்தின் உண்மையை உபாத்தியாயருக்கு விளக்குவதற்கு, இவ்வம்பு துணேயாயிருக்குமென்று நினேத்து, அதைக் கையோடு கொண்டு சென்றேன்.

"ஆசிரியரைக் காண வேண்டுமென்று நானெடுத்துக் கொண்ட முயற்சி பயன்படவில்லே. அவரில்லத்திற் சென்று யான் வினவியபோது, அங்குள்ளவர்கள், முன்னுளிரவே யவர் திருவுறை நகரத்திற்குச் சென்ருரென்று அறிவித்தனர்; மற்றும் யாதோ ஒன்று குறித்தவர் பெருங்கவலே யடைந்தனரென்றும், அது யாது பற்றி என்பது தங்களுக்குத் தெரியாதென்றும், வீட்டிலுள்ளவர்களெனக்குத் தெரிவித்தனர். இது கேட்டு நான் மிகவுமஞ்சி நின்றேன். எதைப்பற்றி நானவரைக் கேட்க வந்தேனே, அதுபற்றியே கவலே யடைந்தவராய், கனவில் நான் கண்ட அபாயத்தை எனக்கு அறிவிக்குமாறு, ஆசிரியர் எங்களரண்மனேக்குச் சென்றிருக்க வேண்டு மென்றெனக்குத் தோன்றிற்று.

"பலவற்றையும் நினேந்து வாடும் மனத்தனுய் யான் வந்த வழியே திரும்பினேன், நான் புறப்பட்டுப் பாதிதூரம் வந்தவுடன் ஓரோசை என் காதிற்பட்டது. நானேறியிருந்த குதிரையை நிறுததி யவ்வோசை கிளம்பிய திசைக்கு நேரே செவி

சாய்த்தேன். சிறிது நேரத்திற்கு முன் தூரத்திற் கேட்ட வவ்வொலி யருகிற்கேட்டது. எனக்கெதிரிலிருந்த புதரில் யாதோ ஒன்று நகர்ந்து பதுங்குவதுபோல் தெரிந்ததால், காட்டிலுள்ள பல விலங்குகளில் யாதாயிருக்கக் கூடுமென்று சிந்திக்கத் தொடங்கினேன். இங்ஙிலையிற் புதருக்குள்ளிருந்து சாம்பல் நிறமுடைய ஒரு பெரிய உருவம் என் முன்னே வந்தது. இஃதொரு பெரிய கோநாயென்றெண்ணி, என் கையிலிருந்த அம்பை யதன்மேற் செலுத்தும் பொருட்டுச் சிறிது எழுந்து வெள்ளிப்பூண் கட்டிய அம்பை நேராய் அதன் மார்பிற் பாய்ச்சினேன். அது போய் ஆழமாயிறங்கிற்று. சில விநாடிகளுக்குப் பின் யான் கண்ட காட்சியை ஐயோ! நானென்னவென்று சொல்வேன்! அம்புருவி மாண்ட கோநாய்க்குப் பதிலாய் என் தம்பியாகிய இளஞ்சேய் குத்துண்டு கிடக்கக் கண்டேன். இதனுல் யானடைந்த திகிலையுந் திகைப்பையும் எங்ஙனமெடுத்துரைப்பேன்?

"எனது நடுக்கமென்னை விட்டு விலகுமுன் அண்மையில் ஆட்கள் வருஞ் சத்தங் கேட்டது. அதிகாலையில் நான் தேடிச் சென்ற வென்தாசிரியர் படையேந்திய பலருடன் ஓடி வந்தார். என்னுடன் பிறந்த தம்பி கொலையுண்டு கீழே கிடப்பதைக் கண்டு, நானே யவனை மாய்த்தவனென்று என்னை யவர்கள் பிடிக்க வந்தனர். உருவிய வாட்களுடன் வந்த இம்மனிதர் கைக்கு நான் தப்பியோடினேன். அவர்களால் தாக்குண்டு மாள்வதற்கஞ்சி நான் ஏன் ஓடி வந்தேனென்று எனக்கே தெரியவில்லை. இன்றவர்கள் என்முன் வருவாராயின், அவர்களாற் கொலையுண்பதற்கு எள்ளளவு மஞ்சாது, முழுமனதுடன் அவர்கள் முன் தலை வணங்கி நிற்பேன். நிற்க, என்னைத் துரத்தியவர்களில் ஒருவன் என்னைப் பின் தொடர்ந்து வந்தென்னுடன் சண்டை தொடங்கினன். இச் சண்டையில் நானென் எதிரியைக் குதிரையினின்றும் கீழே வீழ்த்தினேன்; எனது வாளும் பொடிப்பொடியா யுதிர்ந்தது. இதற்குப்பின்னெவரு மென்னைத் தொடரவில்லை. எனது தம்பியாகிய இளஞ்சேய் இறந்த பின் நானுமிறப்பதை யவர்கள் விரும்பாமலென்னை விட்டுவிட்

டனர் போலும். அங்கிருந் தோடிவந்த கோலத்துடன் நானுங் கள் முன் நிற்கிறேன். இதுவே எனது வரலாறு.”

இவை யாவற்றையும் உற்றுக்கேட்ட மன்னனாகிய வரம் பன் மிகுதியும் வருந்தி, திகைத்து நின்ற அரசகுமாரனுக்குத் தன்னாலியன்றவரை யாறுதலுண்டாக்கும் நன்மொழிகள் கூறி, அறியாது அவன் செய்த கொலையினால் வந்த பழியை நீக்குவ தற்கேற்ற சடங்குகளைச் செய்ய சமய முதல்வருடன் ஒழுங்கு செய்வதாக மொழிந்தான். மேலுமவன் திருவுறைநகரத்திளங் கோவை நோக்கி, “நீ கண்டகனவி னிருபகுதிகளில் முற்பகுதி மாத்திரம் நிறைவேறிற்றென்று இதுகாறும் நீ கூறியவற்றாற் காணக்கிடக்கின்றது ; இதனால், கனவின் பிற்பகுதியும் நிறை வேறுமென்று உனக்குத் தெரியவில்லையா? நல்ல, புதிய, பெரிய செழித்த நாட்டிற்கு நீ வேந்தனாவாய். கழிவிரக்கப்படுவதை விட்டு என்னுடனரண்மனைக்கு வந்து இனிது வாழ்வாயாக” என்று கூறினான். மன்னனுக்கு இவ்வரசிளங்குமரன்மேல் ஒரு பற்றுண்டாயிற்று ; ஆதலின் அவனை எங்ஙனமேனுந் தன்னுட னழைத்துப்போக வேண்டுமென்று முயன்றான். வாடிக் கலங்கி நின்ற இளங்குமரன், தன்னைச் சுற்றி நடந்துகொண்டிருந்த வற்றைக் கவலையில்லாதவனாய், தான் செய்ததின்னதென்று அறியாமலே, அரசனுடனும் மற்றவருடனுஞ் சேர்ந்து சிறுமலை நாட்டின் தலைநகருக்குச் சென்றான்.

அன்றிரவு கழிந்து கதிரவனுதயமானபோது, தன்னுடன் வந்த அரசகுமாரனை வேந்தன் தனதரண்மனைக் குருக்களிடம் அழைத்துச்சென்றான். புதிதாய்த் தங்கள் நகரத்திற்கு வந்த கோமகன் இயற்றிய பெரும்பழி யவனைவிட்டு நீங்குமாறு குருக் கள் பல சடங்குகளைத் தொடங்கினார்கள். கோமகனுந் தன் பெருங்குற்றத்தை நினைந்து வருந்தியழுதான். சடங்குகளெல் லாம் நிறைவேறினபின் அரசிளங்குமரனின் கொலைப்பழி அவனை விட்டகன்றதென்று குருக்கள் விளம்பினர். மற்றும், அவர்க ளவனைநோக்கி, “மன்னன் மகனே, ஈண்டு நாங்களியற்றிய கிரி யைகளால் நீ குற்றம் நீங்கினவனா யிவ்விடத்தை விட்டுப் பெயர் ந்து போகின்றாய். ஆயினும் நீ செய்யவேண்டியது மற்றொன்

றுண்டு. எங்கள் முன் நீ வந்து, நீ செய்த கொடிய செயலைக் கூறிக் கழுவாய் வேண்டியதற்கறிகுறியாக, உன் பெயர் மாற்றப்படவேண்டும். உனது தம்பியாகிய இளஞ்சேயைக்கொன்றவனென்று எல்லோராலும் இனி நீ அழைக்கப்படுவாய். இதுமுதல் உன்பெயர் 'இளஞ்சேய்க்கொல்லி, என்றிருப்பதாக'', என்றனர். இதனால் ஒருவாறு மனந்தேறி அவ்விளமகன் வேந்தனுடன் அரண்மனைக்குச் சென்றான். என்றாலும் அவன் முகத்திற்குடிகொண்ட சஞ்சலம் அவனைவிட்டு நீங்கவில்லை.

திருவுறை நகரத்துச் செம்மலை வேந்தன் தன்னுடன் கூட்டிக்கொண்டுபோய் விரைந்து பாய்கின்ற தனது பரிகள் கட்டியிருக்குமிடங்களையும், போருக்குரிய ஆயுதங்கள் தொகுத்து வைக்கப்பட்டிருந்த சாலைகளையும், பொன்னுமணியுங் குவித்து வைத்திருந்த பொக்கிஷ சாலைகளையும் இன்னும் பலவற்றையுங் காட்டினான். இவையொன்றின்மேலாயினும் அச்செம்மலின் உளஞ் செல்லவில்லை. இதைக்கண்ட அரசன் சிறிது வருத்தமுற்றான். அரண்மனையிலுள்ள ,வரியவை பலவற்றையெல்லாம் பார்த்து முடிந்தபின், நல்ல வேலைப்பாடு நிறைந்ததாய், வெள்ளித் தகடுகள் வேய்ந்த ஒரு கதவருகே வேந்தன் வந்துநின்று தனதருகில் வாய்திறவாது நின்ற தோன்றலைப் பார்த்து, இளஞ்சேய்க்கொல்லி, உனது மனக்கவலையை மாற்றுவதற்கு என்னுலியன்றதை யெல்லாஞ் செய்து பார்த்தேன். அஃதென்னாலாகாதென்பது இப்பொழுது தெளிவாதலின், என்னைக் காட்டிலும் நுட்பமாயுன்னுடைய கவலையை யறிந்து நீக்கத் தகுந்த வேறொருவரிடம் உன்னை நான் கொண்டு போகின்றேன்,'' என்றனன்.

அரசனிங்ஙனங் கூறிக் கதவைத் திறந்தபொழுது மெல்லிய இளங்குரலுடன் பெண்கள் பேசுஞ் சத்தங் கேட்டது. கதவைத் திறந்து இருவருமுட்சென்று, அரசியுறைகின்ற அந்தப்புரஞ் சேர்ந்தார்கள். சலவைக்கல் தளத்தையுடைய அவ்விடம் பொங்கி மேலெழுகின்ற நீரூற்றுக்களுடையதாய், மிகக் குளிர்ந்திருந்தது. அங்குள்ள சாளரங்களின் வழியாய்த் தரைமீதில் அலை வீசி விளையாடுங் கடற்கரைக் காட்சி இனிது தோன்றிற்று. அரசிக்குப் பணிவிடைசெய்பவர்கள் பலவித வேலைகளிலீடுபட்டு

அமர்ந்திருந்தனர். வரம்பன் மனைவியோ தனியாக ஓரிருக்கையில் வீற்றிருந்தாள். இளஞ்சேய்க்கொல்லி யவனுடைய அழகை மிகவும் வியந்து நோக்கினான். அந்த வேளையிற் பணிவிடைப் பெண்களிலொருத்தி யாதோ சிறு தவறு செய்தது கண்டு மன்னன் தேவி யவளைக் கடிந்து நோக்கினாள். அப்பார்வை மிகக் கொடியதுங் கன்மனத்தைக் காட்டுங் குறியாகவுமிருந்தது. வியக்கத் தகுந்த வெளியழகு வாய்ந்த இவ்வரசியின் மனங் கல்லாயிருத்தல் கூடுமோ? என்று இளஞ்சேய்க்கொல்லி எண்ணியிரங்கினான். (தொடரும்)

---

# சிவஞான போதக் கருத்து

## இரண்டாவது சூத்திரம்

### மூன்றாவது அதிகரணம்

[திரு. M. V. நெல்லையப்பபிள்ளை அவர்கள் B. A.]

(௩௪௧-வது பக்கத் தொடர்ச்சி)

72. சூத்திரத்திலுள்ளபடி "போக்கு வரவு புரிய" என்பது மூன்றாவது அதிகரணம். போக்கு என்பது இறப்பு; வரவு என்பது பிறப்பு; புரிய என்பது செய்ய. முதலாவது சூத்திரத்தில் ஒடுங்கி மலத்து உளதாம் என்று சொன்னதற்கேற்ப ஆசிரியர் இரண்டாவது சூத்திரத்தில் 'போக்கு வரவு' என்றார். உலகில் வாழும் மக்களுக்குச் சூத்திரம் சொல்லப்படுகின்றது. அவர்களுக்கு முதலில் கண்கூடாக நிகழ்வது இறப்பேயாதலால் இறப்பு முதலாவது கூறப்பட்டது என்று கூறுதலுமாம். சூத்திரத்தில் நான்கு அதிகரணங்களையும் சேர்த்துச் சொல்லுங்கால் 'போக்கு வரவு புரிய' என்ற வினையெச்சத் தொடராக எழுவாயின்றிக் கூறிய ஆசிரியர் மூன்றாவது அதிகரணத்தைத் தனியே கூறுங்கால் எழுவாயை வருவித்தும் வினையெச்சத் தொடரை முற்றாக்கியும் "இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்துவரும்" என்று மூன்றாவது அதிகரணத்

தின் மேற்கோளாகக் கூறினர். இந்த மேற்கோளில் மாறுதல் என்பது முன்னிருந்த பரு உடலைவிட்டு உயிர் மாறுதல் அதாவது இறத்தல் ஆகும். பிறக்கும் என்பது பிறிதொரு பரு உடலில் மீளப்பிறக்கும். ஆன்மாக்கள் - உயிர்கள்.

73. மேலே இரண்டாவது அதிகரணத்தில் ஆசிரியர் முதல்வன் தனது அருள் வலியால் (சிற்சத்தியால்) உயிருக்கு அது செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப துன்ப இன்பங்களை நுகரும்படி செய்வன் எனக்கூறி இந்த அதிகாணத்தில் அவ்வுயிர் உலகில் வினைப்படியுள்ள வாழ்நாள் எல்லை முடிந்த பொழுது இறந்து நிரய துறக்கங்களில் துன்ப இன்பங்கள் நுகர்ந்து மீளவும் உலகில் வந்து பிறக்கும் என்று கூறுகின்றார். உயிர்கள் இறந்து மீள்ப்பிறத்தல். மீளவும் எஞ்சிய இருவினைப் பயன்களை நுகர்ந்தும் இருவினைகளைச் செய்தும் பக்குவப்படு தற்பொருட்டாம். இதனுல் அதிகாண இயைபு விளங்கும்.

74. இறந்த உயிர் மீளப் பிறப்பதில்லை எனக் கூறும் கிரீடாப்பிரமவாதிகளை மறுத்தற்பொருட்டு இவ்வதிகாணம் எழுந்தது. கிரீடாப்பிரம வாதம் என்பது ஏகான்ம வாதத்துக்குச் சேர்ந்த 1 "மாயாவாதம், 2 பாற்கரியவாதம், 3 பிரமவாதம், 4 சத்தப்பிரமவாதம் என்னும் நான்குவகை வாதங்களுள் ஒன்று. கிரீடா என்ற வடமொழிச் சொல் விளையாட்டு என்றும், பிரமம் என்பது பிரமப்பொருள் அல்லது கடவுள் என்றும், வாதம் என்பது கூறுதல் அல்லது பேசுதல் என்றும் பொருள்படும். கிரீடாப்பிரமவாதம் என்பது " பிரமப்பொருளே நான், நான் ஒருபடியாக அல்லாமல் பல்வேறு வகைப்பட்ட விகாரப் பொருள்களோடு கூடிப் பலவாற்றுல் விளையாடுகிறேன் என அறிதலே வீடு" என்று பேசுதலாகும். கிரீடாப்பிரமவாதிகள் ஆகமங்களிற்கூறிய குடாகாயம் மகாகாய உவமையை உயிர் பரு உடலைவிட்டு நீங்குதற்குக் கூறி மயங்குவர். குடமுடைந்தபொழுது அதனுள்ளிருந்த ஆகாயம் பொது ஆகாயத்தோடு கூடுமாறுபோல உயிர் பரு உடலைவிட்டு நீங்கிய பொழுது பிரமப்பொருளோடு கூடுமேயன்றி மீள உலகில்

வேறொரு பருஉடலிற் பிறப்பதில்லை என அவர் கூறுவர். குடாகாயம், மகாகாய உவமை உயிரானது தனது உலக வாழ்நாள் முடிந்து முடிவில் வீட்டினை அடையுங்கால் அக்காலம் வரை நிலைத்திருக்கிற நுண் உடலைவிட்டுப் பிரிந்து போதலை விளக்க ஆகமங்களிற் கூறப்பட்டது என்றும், ஒவ்வொரு பிறவியிலும் உயிரானது பரு உடலைவிட்டுப் பிரிந்து போதலுக்கு அவ்வுவமை பொருந்தாதென்றும் ஆசிரியர் கூறி கிரீடாப்பிரமவாதியை மறுத்து பரு உடலைவிட்டு இறந்த உயிர் மீள உலகில் வேறொரு பரு உடலிற் பிறக்கும் என்று தமது மேற்கோளை வற்புறுத்தி உரைக்கின்றார்.

**75**. இனி இவ்வாறன்றி குடாகாய மகாகாய உவமைப் பற்றி மீளப்பிறத்தல் உயிரின்பொருட்டுச் சிவத்துக்கேயாமெனக் கூறும் சிவாத்துவித சைவரையும், மீளப்பிறத்தல் மூலப் பகுதியிற்றோன்றும் புத்தி தத்துவத்துக்கே அன்றி உயிருக்கு இல்லை எனக்கூறும் சாங்கியரையும் மறுத்தற்கு ஆசிரியர் இவ்வதிகரணத்தில் மேற்கோளை உரைக்கினரார் எனக் கூறுதலும் பொருந்தும்.

**76**. இறப்பு என்பது யாது 2. உயிரானது பருஉடல் (தூலதேகம்) நுண் உடல் (புரியட்ட தேகம் அல்லது சூக்கும தேகம்) குண உடல், கஞ்சுக உடல் காரண உடல் என்னும் அஞ்சு உடல்களையும் உடையது. இந்த உடல்களெல்லாம் பல வகைப்பருமை நுண்மைகளை உடைய பூத அணுக்களாலாகியன. அந்த அணுக்களெல்லாம் ஒன்றோடொன்று சேர்ந்து கலந்தேயுள்ளன. உலகில் வாழுங்கால் மாந்தர்கள் இந்த ஐவகை உடல்களுடனிருக்கிறார்கள். பரு உடலானது ஏனைய காரண உடல் கஞ்சுக உடல் குண உடல்களுடன் கூடிய நுண் உடலை விட்டு நீங்குதலே இறப்பு ஆகும். இறப்பு என்ற சொல் முதற் பொருளாக கடத்தல் அல்லது போக்கு என்று பொருள்படும். போக்காவது இந்தப்பரு உலகிற்குரிய பருஉடலை விட்டுப் போதலாகும். அவ்வாறு உயிர் பருஉடலை விட்டு நீங்குதல் பாம்பு ஒன்று தனது மேற் சட்டைபோன்ற தோலைக் கழற்றிப்

பிறிதொரு புதிய தோல் போர்த்தல் போலவும், உயிர் நாடொறும் இரவில் நனவு நிலையினின்று நீங்கிக் கனவு நிலையை அடைதல் போலவும், யோகி ஒருவர் தமது பருஉடலை விட்டுப் பிறிதொரு பருஉடலிற் புகுதல் போலவும் உள்ளது. இவ்வாறு இறப்பு உண்டாகுங்கால் உயிர்பரு உடலை விட்டு நுண் உடலை அடைதலாகிய உடல் வேறுபடுதலும், பருஉலகம் விட்டு நுண் உலகம் சேர்தலாகிய இடம் வேறுபடுதலும் நனவு நிலை நீங்கிக் கனவு நிலையடைதலாகிய அறிவு வேறுபடுதலும் நிகழ்கின்றன. இறப்புக்குப் பின் நிகழும் கனவுலகைப்பற்றி நமக்கு உலகிற் பழக்க நிகழ்ச்சியாயுள்ளது. நாம் துயிலும்பொழுது அடையும் கனவு உலகமாகும். நாம் துயிலும் பொழுது பரு உடலுக்கும் நுண் உடலுக்கும் உள்ள தொடர்பு (link) விட்டுப் போகவில்லை ; இறக்கும்பொழுது இத்தொடர்பு விட்டுப் போகின்றது. இதுவே இருவகைக் கனவு நிலைகளுக்குமுள்ள வேறுபாடாகும். இதுபற்றித் திருவள்ளுவர் "உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்றார்.

"துன்னிய உயிர்கள்தூல உடல்விட்டு வானினூடு
மன்னிடும் நனவுமாறி கனவினை மருவுமாபோல்"

என்று சிவஞான சித்தியாரிற் கூறியிருத்தலுங் காண்க. ஒருவனுயிரிறக்குங் காலத்தில் அப்பொழுது முடிகிற வாழ்நாளின் வரலாறுகளெல்லாம் அதற்கு முன்னே ஒரு படம் போலத் தோன்றி அது அவைகளை நினைத்துக் கொண்டிருக்கின்றது. அப்பொழுது அந்த உயிர் இறக்குமிடத்தில் அமைதியைக் கெடுக்கக்கூடிய அழுகை இரைச்சல் முதலியவைகளை எவரும் செய்யாதிருத்தலே அதற்கு நலமாயிருக்கும். அந்நேரத்தில் அவ்வுயிருக்குக் கடவுளைப்பற்றி நினைப்பூட்டத் தகுந்த மறைமொழித் துதிப்பாக்கள் ஓதப்படல் வேண்டும்.

77. இறப்பைப்பற்றி உலகில் பெரும்பான்மையான மக்களுக்குச் சரியான கருத்துகளில்லை. அவர்கள் உலக வாழ்வின் குறிக்கோளும் பயனும் இன்ன என்று அறியாதிருத்தலால் தங்க

ளுக்கும் பிறர்க்கும் பயன் படும்படியாய் உலகில் வாழவேண்டு மென்று அறியாதிருக்கிறார்கள். வாழ்வைப்பற்றி அவர்கள் அறியாதிருத்தல் போலவே இறப்பைப்பற்றியும் அவர்கள் அறியாதிருக்கிறார்கள். இறப்பானது தங்களுடைய உயிர் வளர்ச்சி (Soul-evolution)க்காக கடவுளது ஆணையால் நிகழ் கிற ஒரு இயற்கை நிகழ்ச்சி என்னும் உண்மையை அறியாமல் அவர்கள் தங்களுக்காவது தங்களைச் சேர்ந்தவர்களுக்காவது இறப்பு வந்தால் மிக்க துயரடைகிறார்கள். அவர்கள் தாங்கள் உயிரோடு உலகில் வாழ்ந்த காலத்தில் கடவுளுக்கும் தங்களைச் சேர்ந்த மக்களுக்கும் பொது மக்களுக்கும் தங்கள் கடமையை ஒழுங்காகச் செய்து வந்திருந்தார்களானால் இறப்பு வந்த பொழுது அதனுக்கு அஞ்சாமல் மகிழ்வுடன் ஏற்றுக் கொள் வார்கள்.

**78.** உயிர்களுக்கு இறப்பு வருதற்கு உடலைப்பற்றிய காரணமானது அது பிறந்த பருஉடலில் கண் செவி முதலிய உறுப்புகளெல்லாம் தளர்ந்து வலியிழந்து தொடர்ந்த வாழ்வு வாழ முடியாதிருத்தலும் இளைப்பாறுதலும் ஆகும். மக்கள் பலர் கிழப்பருவம் அடைதற்குமுன் இளமையிலும் ஏனைய இடைக்காலங்களிலும் இறத்தலானது அவர்கள் முன் செய்த தீவினையாலும் அவர்களுக்கும் அவர்களைப் பெற்ற தாய் தந்தை யர்களுக்குமுள்ள தொடர்பு வினையினாலும் (personal karma) உண்டாகின்றது.

**79.** உயிருக்கு உடலின் தொடர்பால் இளைப்பாறுதல் இன்றி அமையாது வேண்டப்படுவது என்பது நாம் நமது வாழ்க்கையிலுள்ள பழக்கத்தினால் அறியலாம். பொதுவாக, பகல் வேலை செய்யவும் இரவு இளைப்பாறவும் அமைந்த காலங்களாயுள்ளன. பகலிலும் நாம் ஒரு யாமம் அல்லது பத்து நாழிகைக்கு மேலாகத் தொடர்ந்து வேலை செய்தல் முடி யாது. பலவகைத் தொழில் நிலையங்களிலும் கல்லூரிகள் பள் ளிக்கூடங்கள் முதலிய கல்வி கற்பிக்கும் நிலையங்களிலும் ஒவ் வொரு நாளினும் தொடர்ந்து வேலை செய்யும் நேரம் ஏறக்

குறைய ஒரு யாமம் நேரமாகவும், வாரம் ஒன்றுக்கு ஒருநாள் விடுமுறை நாளாகவும், ஆண்டு ஒன்றுக்கு ஒன்று அல்லது இரண்டு திங்கள் விடுமுறைத் திங்களாகவும் அமைக்கப்பட்டிருத்தல் உடலோடு உலகில் வாழ்மக்களுக்கு இளைப்பாறுதல் இன்றி அமையாது வேண்டப்படுவது என்னும் உண்மையை உணர்த்துகின்றது. பல ஆண்டுகள் சேர்ந்த ஒரு பிறப்பு வாழ்நாளில் வேலை செய்துவந்த மக்களுக்கு இளைப்பாறுதல் வேண்டப்படும் என்பது தெளிவு.

80. இறப்புக்கு உயிரைப்பற்றிய காரணம் மக்கள் உயிரினது வினைநலம் பக்குவம் அடைதலாகும். அஃது அடுத்துக் கூறப்படுகிற இறப்புப்பின் வாழ்நிலைக்குப்பின் கூறப்படும்.

81. இறப்புப் பின் வாழ்வுநிலை (Life after death) மக்களது உயிர் இறந்தபின் கனவுலகத்தின் (புவர்லோகத்தின்) ஒரு பிரிவாகிய நிரய உலகத்தை அடைந்து துன்பம் நுகருகின்றது. நிலஉலகமும் (பூலோகமும்) கனவுலகமும் ஒன்று கீழேயுள்ளதென்றும் மற்றொன்று அதற்குமேல் அடுக்காக உள்ளது என்றும் கருதுதல் கூடாது. அவ்வுலகங்கள் மாயா தத்துவங்களின் பருமை நுண்மைகளால் (State of matter) வேறுபாடு உடையனவே அன்றி இடத்தால் வேறுபாடு உடையன அல்ல. மக்களது உயிர் பருஉடலை விட்டுப் பிரிந்து ஏனைய உடல்களோடு சோந்த நுண்ணுடலோடு நிரய உலகத்தில் தங்குகின்றது. இந்த நுண்உடல் உயிர் வீடுபேறு அடையுங் காலம் வரை அல்லது அழிப்புக்காலம் (சங்கார காலம்) வரை கெடாமலிருத்தலினாலே அதனைத் தொடர்பாகப் பற்றிக்கொண்டு நுண்பூத அணுக்களாலாகிய அவ்வுடலிலிருந்து பிறவிதோறும் பழம்பூத அணுக்களாலாகிய வேறு வேறு பரு உடல் உண்டாகின்றது. இறந்த உடனே இந்த நுண் உடலானது உயிர் உலக வாழ்விற் செய்த மறச்செயல்களுக்கு (பாவச் செயல்களுக்கு) ஏற்ற துன்பம் நுகர்தற்குத் தக்கவாறு தனது நுண்பூத அணுக்களது சேர்க்கையில் மாறுதல் அடைகின்றது. இப்படி மாறுதல்

(தொடரும்)



9/4 சோமசுந்தரர் சங்கப்பலகை தந்தது.